REGD

சந்தா விபரம்
—
1 ஆண்டு ரு 7,
½ „ 3 8 0

# திராவிடநாடு

16 பக்கம்
விலை
இரண்டணு

இலங்கை 15 சதம் | மலாய்நாடு 12 காசு

மலர் 8 | 4—12—49 | இதழ் 23

## கல்வி வள்ளல்



காஞ்சிபுரத்தில் கல்லூரி ஏற்படுத்துவதற்காக ரூபா 50,000—0—0 நன்கொடை கொடுத்துதவிய தோழர் சி. கந்தசாமி அவர்கள்.

## குடி விலக்கா?-கொள்கை விலக்கா?

16-ம் பக்கத் தொடர்ச்சி

களா, இவர்கள்! இருந்தும் என் இந்த உத்திரவு போட்டிருக்கிறார்கள்! என்ன நேர்ந்துவிட்டது, எக்காளமும் முழக்கமுமிட்ட இக்கனவான்களுக்கு!

கேட்கத்தான் தோன்றும் என் என்ற கேள்வி எழுப்பத்தான் செய்யும்.

* * *

"மதுவிலக்கு சாத்தியமா?"

"இது பிற்போக்கான கேள்வி!"

"அமுல் நடத்த இயலுமா, உங்களால்!"

"ஏன் முடியாது, மகாத்மா காட்டிய வழியல்லவா, அது!"

"படிப்படியாகக் கொண்டுவந்தால் என்ன?"

"பயனற்ற பேச்சு! இது நடைச் செய்யாவிட்டால், பக்தனுக்கு நாங்கள் கூறியதெல்லாம் வீணென்றுதானே ஆகும்?"

இப்படியெல்லாம் சட்டசபைகளிலே, மதுவிலக்குக் கூடாது என்றவர்கள், இவர்களால் நடத்தமுடியாது என்று சொன்னவர்கள், வசதி எங்கே இருக்கிறது, வக்குண்டா இவர்களுக்கு என்றெல்லாம் கிண்டலையும் கேலியும் வீசியவர்கள் பலருண்டு, கீழ்சபையிலும் மேல்சபையிலும். அவர்களிலேபலர் கிண்டலாகக்கேட்டாலும் சரி, பணமார மக்கள் நன்மையைவைத்துக் கேட்டாலும் சரி, கேள்விகள் எப்படியிருந்தாலும் சிறிப்பாய்ந்தனர், கனலக்கங்களாகயிருந்தனர், மக்கள் நலனை மதியாதவர்கள் என்று அழைத்தனர் நமது மந்திரிமார்கள். அவ்வளவு ஆர்வத்துடன், மதுவிலக்கை அமுல் நடத்தப் போவதாக, எது நேர்ந்தாலும் இம்மியும் அசைந்து கொடுக்கப் போவதில்லையென்று, '17-கோடி நஷ்டமாகிறது. பரவாயில்லை, பார்த்துக்கொள்கிறோம்' என்பதாக வீரமுழக்கமும், வேகப்பேச்சும், வீசிவந்தனர், காங்கிரஸ் மந்திரிகள், கனம் உறுப்பினர்கள், தேசிய நண்பர்கள்.

மதுவிலக்கு மக்களுக்குத் தேவையான ஒன்று, அவசியமானது, நலன் விளைவிக்கக் கூடியது என்று நாம் கூறினோம். இதனால் ஏற்படும் நஷ்டத்தை, எப்படியாவது ஈடுகட்டிக் கொள்வோம், ஏழையின் வாழ்வை மட்டுமின்றி மனிதனின் அறிவையே குட்டிச்சுவராக்கும் இக்கொடுமை அழியட்டும், ஒழியட்டும் என்று ஆனந்தமுடன் வரவேற்றோம், மக்களும். மதுவிலக்கால் ஏற்பட்ட, வரிப்பளுவையும் மனங்கூசாது, வாய்திறவாது செலுத்தினர் — செலுத்தி வருகின்றனர்.

காந்தியடிகள் காட்டிய பாதையில் நடப்பதே தங்கள் லட்சியம் என்று கர்ஜித்த கனவான்கள், மந்திரிமார்கள் "மதுவிலக்கு நீக்குவிழா"வுக்கு ஒத்திகை நடத்துவோமா, என்று யோசிக்கிறார்கள், ரூ 500 கொடுத்தால் போதும் ஒருமாதத்துக்கு நான்கு பாட்டில்கள் என்று பிரகடனப் படுத்துகிறார்கள்!

* * *

மதுவிலக்குபற்றி அதிசிரத்தையும், ஆர்வமும் கொண்டவர்கள் தான், நமது மாகாண மந்திரிகளும் காங்கிரஸ் தலைவர்களும். நாம் அதை மறுக்கவில்லை, கள் குடிப்பதையே கடமையாகக் கொள்ளுங்கள், பிராந்தியே மன சாந்திக்குமருந்து, என்று கூறுபவர்கள் என்று கூறமுடியாது, இவர்களை! ஆனால் அவ்வளவு ஆசையும், ஆர்வமும், மக்களுக்கு சுகம் தேடித் தரவேண்டும் என்று ஆசை கொந்தளிக்க, ஆர்வம் நரம்புகளிலெல்லாம் துடிக்க இருந்த இவர்களுக்கு இப்போது மட்டும் என்ன ஏற்பட்டு விட்டது! கேட்க வேண்டிய கேள்வி. கேள்விக்குக் கிடைக்கும் விடையிருக்கிறதே, அதில்தான் இருக்கிறது சூட்சமம்.

* * *

அண்மையில் சென்னை சர்க்கார் கடந்த ஆண்டு தாங்கள் நிறைவேற்றிய மதுவிலக்குச் சட்டத்தில் திருத்தம் செய்ய வேண்டுமென்று ஒரு மசோதா கொண்டு வந்து இரு சபைகளிலும் நிறைவேற்றி சட்டமாக்கி யிருக்கிறார்கள். மதுவிலக்குச் சட்டத்தில் திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது என்றதும், ஏதோ குறைபாடு இருந்தது போலும், குற்றஞ் செய்தவன் தப்பித்துப் போக சந்து பொந்து இருந்துவிட்டது போலும் அதை அடைத்துத் தடுக்கவே, திருத்த மசோதா கொண்டு வந்து நிறைவேற்றி யிருக்கிறார்கள் என்று நினைக்கத் தோன்றும், சாதாரணமாக யாருக்கும் சில்லறை விஷயத்திலே சிந்தனையைச் செலுத்துபவர்களா, நமது ஆளவந்தார்கள். ஆகவே, இதுபோன்ற எக்காரியத்தையும் அவர்கள் செய்யவில்லை.

மதுவிலக்கு கொண்டுவந்த சர்க்கார் மது குடிக்கத் திருத்தம் கொண்டுவந்து சட்டமாக்கியிருக்கிறது.

நவம்பர் 26-ந்தேதியன்று, நடைபெற்றதாகும் இந்நிகழ்ச்சி. காங்கிரஸ் சர்க்கார், காந்தியாரின் சீடர்களா, இப்படிச் செய்துள்ளார்கள் என்று கேட்கத்தோன்றும். 'ஆமாம்' என்று கடந்த ஆண்டு அவர்களை எக்காரியத்துக்காகப் பாராட்டினோமோ அதே வாய் கூறவேண்டி நேரிட்டதே என்ற சோகமும், வேதனையும் நம்மை இடிக்கிறது.

என் செய்வது, இவர்கள் போக்கைக் கண்டுதான், எதையும் நிர்ணயம் செய்ய முடியவில்லையே! முன்னென்று பின்னென்றும் மொழிவதும், முரண்பட்டுப் பேசுவதும் தான் நித்திய நிகழ்ச்சிகளாக யிருக்கிறதே!

கொண்டு வரப்பட்ட திருத்த மசோதா, என்ன தெரியுமா, குடிப்பதற்கு அனுமதி தருவது. ராணுவத்தில் இருக்கும் எல்லாவித அதிகாரிகளும், இனிக் குடிக்கலாம் எனக் கூறுவதாகும்.

ராணுவத்தில் இருக்கும் எல்லாவித அதிகாரிகளும் சிப்பந்திகளும் இனி மது வருந்தலாம், அவர்களுக்கு மதுவிலக்குச் சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிக்கப்படுகிறது, இனி அவர்கள் தாராளமாக மது வருந்தலாம்.

என்பதே, இப்போது இவர்கள் சட்டபூர்வமாக நிறைவேற்றி யிருக்கும் திருத்த மசோதாவாகும்.

மது வருந்துவது மாபாவம்!

பஞ்சமா பாதகங்களில் ஒன்று, அது!

குடிப்பது—குடி கெடுக்கும்!

மது பானம்—விஷ பானம்!

என்றெல்லாம், எக்காளமிட்டு வரும் காங்கிரஸ் சர்க்காரின் 'கண்யம்'

(5-ம் பக்கம் பார்க்க)



# ★ கடவுள் விஷயம்! ★

கடவுள் இருக்கிறார்!

கடவுளுக்குத் தெரியும்!

கடவுள்விட்ட வழிப்படி நடக்கட்டும்!

கடவுளுக்குப் பொதுவாக நட!

கடவுள் சாட்சியாகச் சொல்கிறேன்!

கடவுள் கொடுத்தது இவ்வளவு தான்!

கடவுள் கைவிடமாட்டார்!

கடவுளின் மீது பாரத்தைப் போடு!

* *

கடவுளைக் கண்டவர் இவர்—பெரிய ஞானி—மூடுடா வாயை!

கடவுளா பொறுப்பாளி, நீ செய்த தவறுக்கெல்லாம்?

கடவுளா கொடுத்தார்—கொள்ளை அடித்துவிட்டு, கடவுளையா சாட்சிக்கு இழுக்கிறே!

கடவுளையே நம்பிக்கொண்டு, கிடடா—காரியம் நடந்துவிடும்—மூடா, உன் கடமையைச் சரியாகச் செய்யாமே, கடவுளைக் கூப்பிடறயா, எதற்கு எடுத்தாலும்!

கடவுள் காப்பாற்றுவார் போடா—ஏன் என் எதிரே பல்லைக் காட்டிக் கிட்டு நிற்கவேணும்—போ, போ—கடவுளைக் கேளு தரச் சொல்லி—தருவார்—போ.

* * *

கடவுள் எப்படித்தான் இந்த அக்ரமத்தைப் பொறுத்துக் கொண்டாரோ தெரியவில்லை.

கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று துளியாவது பயந்தா நடக்கிறான் அந்தப் பாவி.

கடவுள் கூடத்தான் பயப்படுகிறார் இப்படிப்பட்டவர்களிடம்.

கடவுள் என்ன செய்துவிட்டார் அவனை—கண்ணைக் குருடாக்கி விட்டாரா—கைகாலை ஒடித்துவிட்டாரா—கொழுத்துத்தான் கிடக்கிறான்.

கடவுள் கொடுத்தார்னுதான் 'ஜம்பம்' பேசுகிறான், அந்தக் கள்ளன்.

கடவுள், அவன் பக்கமா இருப்பது—அடுக்குமா?

கடவுள் கண் பார்த்தா, நமக்கா இந்தக் கஷ்டம் வரும்?

* * *

கடவுளே! உனக்குக் கண்ணில்லையா?

கடவுள் இருந்தா இப்படியா செய்வார்?

கடவுள், கடவுள் என்று நாம் தான் கதறுகிறோம்—காரியவாதி கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதை மறந்துதான் வேலைசெய்கிறான்—கடைசியிலே அவன் பக்கம்தான் கடவுள் இருக்கிறார்.

* * *

கடவுளே! நான் என்ன பாபம் செய்தேன், இந்தப் பாடு படுத்துகிறயே!

கடவுளே! ஏனோ இப்படி என்னைச் சோதிக்கிறே?

கடவுளே! இனி என்னாலே சகித்துக் கொள்ள முடியாது!

* * *

கடவுள் தண்டிக்காமல் விடமாட்டார்—அரசன் அன்று கொன்றால் கடவுள் நின்று கொல்லும்.

கடவுள் 'பேர்' சொல்லி ஊரை ஏய்க்கிறானப்பா, அந்த எத்தன்.

கடவுள் காப்பாத்துவார்னு கிடந்தான் அந்த ஏமாளி, கடைசி வரையிலே.

* * *

கடவுள், என்ன செய்யச் சொல்வார் என்பது எனக்கும் தெரியும்—நீ ஒரு உபதேசமும் செய்ய வேண்டாம், உன் வேலையைக் கவனி.

கடவுள் கேட்டாரா உன்னை, ஊர்த் தாலியை அறுத்து உற்சவம் செய்யடான்னு?

கடவுள்தான் தின்கிறாரா! பொங்கலையும் புளியோதரையையும்?

* * *

கடவுள் எங்கும் நிறைந்தவர்—எல்லாம் அறிந்தவர்.

கடவுள் கோயிலைக் கேட்கவில்லை, கும்பாபிஷேகம் கேட்கவில்லை, உன் மனசைத்தாண்டா கோயிலாகத் தர வேணும் அன்புதான் அவருக்குப் பிரியமான அபிஷேகம்.

கடவுள் காரியம் இது, முணுமுணுக்காமல், உன் சக்தியானுசாரம் கைங்கரியம் செய்.

கடவுளுக்காக நீ வக்கீல் வேலை செய்யவேண்டாம், எனக்கும் தெரியும், கடவுள்.

கடவுளே! கடவுளே! நல்ல கடவுளடா இது! நயவஞ்சகனை வாழவிட்டு வேடிக்கை பார்க்கிற கடவுள்!

கடவுள் 'மனசி'லே என்ன எண்ணிக் கொண்டிருக்கிறாரோ, யார் கண்டாங்க?

கடவுளைக் காணவா முடியும்! கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்!

* * *

கடவுள்—என்ற சொல்லைக் கலந்து பேசுவதிலே, இப்படிப் பல வகை உண்டு. பேசுவோரின் சுபாவம், அவர் பேசும்போது அவருக்கு உள்ள நிலைமை, அவருடன் உரையாடுபவரின் தன்மை, ஆகியவைகளுக்கு ஏற்றபடி, இந்த 'வகை' இருக்கும். எல்லோரும் ஒரே மனப்பான்மை கொண்டவர்களல்ல—எனவே அனைவரும் ஒரே வகை

யாகப் பேசவேண்டுமென்பதில்லை— பேச்சுப் பலவகையாகத்தான் இருக்கும். இதிலே ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால், ஒரே 'ஆசாமி' கடவுள் சம்பந்தமாகப் பேசும்போது ஒரு வேளை ஒரு வகையாகவும், மற்றோர் வேளை மற்றோர் வகையாகவும் பேசுவார்—ஆச்சரியம் அதிலேதான் அதிகமிருக்கிறது. வேளைக்கோர் வகையாக இந்தப்பேச்சு மாறுவதை, பேசுபவரே கூடச் சரியாக உணருவதில்லை—சுட்டிக் காட்டும்போது கூட, அவர் சிரிப்பார் அல்லது சீறுவார்— விளக்கம் தரமாட்டார்.

* * *

கடவுள் என்ற சொல்லைக் கலந்து பேசாதவர்கள் மிகக் குறைவு; கடவுள் என்ற சொல்லை எப்போதும் ஓரேவிதமான மனப்பான்மையுடன் பேசுபவரோ, அதைவிடக் குறைவு! சிலர் சில வேளைகளில் பேசும்போது பார்த்தால், அவர்களை நாயன்மார் வரிசையிலே வைக்கலாம் போல தோன்றும்; சிலர் பேசும்போதே அவர்கள் நாத்திகர்களோ என்று கேட்பவர்களை ஐயுறச் செய்யும்! விந்தை இதுகூட அல்ல. நாயன்மார் வரிசையிலே வைக்கலாம் என்று தோன்றக்கூடிய விதமாக ஒரு சமயத்தில் பேசியவரின் மற்றோர் வேளைப் பேச்சு, அவரையே, நாத்திகக் கூட்டத்திலே சேர்க்கவேண்டும் போல் காணப்படும்.

* * *

கடை முதலாளி கவலையுடன் உட்கார்ந்திருக்கிறார் — அவர் எதிரே, பார்வதிசமேதரின் படம், மலர்மாலையுடன் காட்சியளிக்கிறது—நீறுதான் நெற்றியில் — சந்தனமும் உண்டு. கவலையுடன் இருப்பவரிடம், பக்குவமாக நடந்துகொண்டு பழக்கப்பட்ட 'எடுபிடி', குத்துவிளக்கைத் தூண்டிக்கொண்டே பேசுகிறான்.

எ:— சந்திரசேகர செட்டியார் சரக்கு பூராவும் விலையாகி விட்டதாம்.........

மு:— பூராவுமா?

எ:— ஆமாம்—யார் கிடைப்பானுங்களோ, தலையிலே மூட்டை கட்டலாம்னுதான் செட்டியார் காத்துக் கொண்டிருந்தாரே! கிடைச்சானொரு ஏமாளி — பூராசரக்கையும் தள்ளி விட்டார் அவனிடம்.

மு:— எவ்வளவு கிடைச்சுதாம்?

எ:— ஆறுக்குக் குறையாதாம்.

* * *

கடை முதலாளி ஒரு நீண்ட பெருமூச்சுடன், "அம்பிகே!......" என்று ஒருமுறை கூறிவிட்டு, "ஆறு இருக்கும்னு சொன்னுங்க?" என்று மீண்டும் கேட்கிறார். எடுபிடி, "ஆமாங்க! ஆறுக்கு மேலேயே இருக்குமாம்" என்று பதிலளிக்கிறார்— மீண்டும் ஒரு பெருமூச்சு, மறுபடியும் "அம்பிகே!" என்று அழைக்கிறார், கடை முதலாளி.

* * *

இப்படிப்பட்ட நிகழ்ச்சி அன்றாடம் நடைபெறுகிறது—சர்வ சாதாரணமான நிகழ்ச்சி என்று கருதுகிறோம், ஆகையினாலேதான், இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளைப் பற்றிச் சிந்திக்காமலேயே இருக்கிறோம்.

* * *

சந்திரசேகருக்கு ஆறு யிரம் ரூபாய் இலாபம் கிடைத்தது—முடங்கிக் கிடந்த சரக்கு விற்பனையாகிவிட்டது. இந்தச் 'சேதி'யைக் கேள்விப்படும், கடை முதலாளியின் கிடங்கிலே சரக்கு அடைபட்டுக் கிடக்கிறது — ஏட்டிலே இலாபம் குறிக்கப்படவில்லை — இந்நிலையில், வேறொருவர், வியாபாரத்திலே வெற்றி பெற்றார் என்று கேள்விப்பட்டதும், பெருமூச்சுடன், அம்பிகா! அம்பிகே! என்று அழைக்கிறார்! அவ்விதம் அவர் அழைக்கும்போது, அவர் மனப்பான்மை என்ன? பக்திப் பரவசத்திலே, அவ்விதம் கூவி அழைத்தாரா? பாராட்டுதலுக்காக அழைத்தாரா? துணை செய் என்று கூப்பிட்டாரா? அவன் அடித்துவிட்டானே கொள்ளை, எனக்குக் கிடைக்கவில்லையே, நான் உன்னைப் பூஜை செய்தவண்ணம் இருப்பவனுயிற்றே, என்ன செய்தாய் எனக்காக, அதோ பார் சந்திரசேகரன் இலாபம் சம்பாதித்துவிட்டான், உன் சக்தியை என் பக்திக்காக மெச்சி என் பக்கம் திருப்புவாய், எனக்கும் இலாபம் கிடைக்கும் என்றுதானே நம்பி உனக்கு நெய்விளக்கு ஏற்றினேன்,இருந்தும், என்னைக் கவனிக்காமலிருக்கிறாயே —என்று அம்பிகையிடம் குறைபடுகிறாரா, மிரட்டுகிறாரா? அம்பிகையை அவர் அந்தச் சமயம் அழைத்தபோது, எந்தவிதமான மனப்பான்மையுடன் இருப்பதாக எண்ணுகிறீர்கள்? எண்ணிப் பாருங்கள்—எண்ண, எண்ண வேடிக்கை வளரும். அவரையே கேட்டுப் பாருங்கள்—அவர் சாதுவாக இருந்தால்—அதைவிட வேடிக்கையாக இருக்கும்.

* * *

கடை முதலாளியின் பெயரைக் கந்தப்பன் என்று கொள்வோம்—அவர் துணைவியாருக்கு, சின்னம்மா என்று பெயரிடுவோம். இருவரும் சந்திக்கின்றனர். அவரைச் சந்திக்கு முன்பே, சந்திரசேகரர் 'சேதி' அம்மைக்குத் தெரிந்துவிட்டிருக்கிறது. சமயமறிந்து கேட்கிறார்கள், "அவர் கடையிலே சரக்கு பூராவும் விற்று விட்டாராமே" என்று. "ஆமாம்" என்று சுருக்கமாக, சோகத்துடன் கூறுகிறார் கந்தப்பர். "கடவுள் அவருக்கு நல்ல வழி காட்டினார்"—என்று சின்னம்மா கூறுகிறார்கள், எப்போதும் போல. கந்தப்பரை நாம் பார்த்திருக்கிறோம் முதலிலேயே, கவனமிருக்கிறதல்லவா? நீறு பூசியவர்!! எனவே, சைவர், பக்தர்! எனினும் சீறுகிறார், சின்னம்மாவின் பேச்சைக் கேட்டதும்; "கடவுளு காட்டினாரா, கடவுளு! பய, ஆளை விழுங்கி......வாடிக்கைக்காரனை வலை போட்டு பிடித்து, அண்டப் புளுகு, ஆகாசப் புளுகு பேசி, கொள்ளை அடித்துக்கிட்டான். கடவுளு கொடுக்கிறாரா, கடவுளு! இவனுக்கா! மாதத்திலே மூன்றுசடவை கூட நிஜம் பேசமாட்டானே, அவனுக்குப் போய், கடவுள் உதவி செய்வாரா? தாரு தர்மலிங்கம் இல்லே, நம்ம கடைக்கு வருவானே முன்னே எல்லாம், அவனுக்கும் நமக்கும் கொஞ்சம் தகராறு, அதனாலே அந்தப் பய, நம்ம கடை வாடிக்கையைச் சந்திரசேகரன் கடைக்குத் திருப்பிவிடுகிறான்—அதனாலே ஒரு 'சான்சு' அடிச்சுது......கடவுளு, போய்க் கூட்டிக்கிட்டு வந்து சொன்னாரா, "போடா"

(13-ம் பக்கம் பார்க்க)



## குடிவிலக்கா? கொள்கைவிலக்கா?

2-ம் பக்கத் தொடர்ச்சி

நிறைந்த செயல்தான் இது. மதுவிலக்கு வேண்டும் என்பதற்கு இது போன்ற காரணங்களையே காட்டினர், மதுவை—அரக்கன் என்றே அழைத்தனர், கொடும்பாவி கட்டி இழுத்தனர், கொலை பாதகச் செயல் என்று கூறினர்—இப்போதும் கூறி வருகின்றனர்.

மது, மக்கள் வாழ்வைச் சூறையாடும் சூறாவளி, வேதனைகளை வீசும் புயல், இன்பச் சோலையை பாலையாக்கும் மண்மாரி, என்பதில் யாருக்கும் கருத்து வேற்றுமை, கிடையாது ஆளையே மாற்றிவிடும், மனதையே குழப்பிவிடும், ஆளைத் தள்ளாடச் செய்யும், ஆட்டம் போடுவர் அதை உட்கொண்டு விட்டால்! ஆகவே, அது, பெருந்தீது பயப்பது, நாட்டை நாசமாக்குவது என்ற காரணங் கூறி, மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வந்தனர். நாமும் மகிழ்ந்தோம், நாடும் போற்றியது. இப்போதோ, ஒரு வருடம் கூட மறைவதற்குள், பாடம் திருப்பிப் படிக்கப்படுகிறது. ராணுவத்திலிருப்போர், மது குடிக்கலாம், 'மாபாவம்' என்று கூறப்பட்டதைச் செய்யலாம், விஷம் என்று உரைக்கப்பட்டதைக் குடிக்கலாம், என்று விருத்தம் பாட ஆரம்பித்துள்ளனர்.

மதுவிலக்கு — காங்கிரசின் கொள்கை, காந்தியாருடைய ஆசை என்று கூறப்பட்டது. அதே கூற்றின்மீது மதுவிலக்கு அமுலுக்கு கொண்டு வரப்பட்டது.

ஆனால் இப்போதோ திருத்தம் கொண்டு வந்திருக்கிறார்கள், ராணுவத்தில் உள்ளவர்கள் மட்டும் குடிக்கலாம், அதற்கேற்றவாறு சட்டத்தில் 'சந்து பொந்து' உண்டுபண்ணியிருக்கிறார்கள், காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த முன்னாள் மந்திரி கோடி ரெட்டி 'கூடாது' என்று கூற, என். எம். ஆர். சுப்பராமன் போன்றோர் குறைபட்டுக் கொள்ள.

மேல் சபையில், இம்மசோதா விவாதத்துக்கு வந்தபோது யாரார் அரசியலாரின் மதுவிலக்குக் கொள்கையைக் கண்டித்து வந்தனரோ, மதுவிலக்கு கொண்டு வருவது நல்லதல்ல என்று கூறினரோ, அவர்கள் கூட ஆளவந்தாரின் மது குடிக்கலாம் எனக் கொண்டு வரும் திருத்த மசோதாவைக் கண்டித்துள்ளனர்.

"சாதாரண மக்களுக்கு மட்டும் மது தீமை பயப்பது என்றால் ராணுவஸ்தர்களுக்கு மட்டும் தீமை பயக்காதா? ஆக்கிரமிப்பைத் தவிர்க்க அவர்கள் மதுவருந்த வேண்டும் என்று கூறினல், எப்படி ஆக்கிரமிப்பை எதிர்த்துப் போராட மது அவசியமோ அதுபோல உற்பத்தியைப் பெருக்க உழைக்கும் தொழிலாளர்களுக்கு மட்டும் என்ன நிலையாம்! 'போர்முனைக்கு மது தேவையென்றால் அதுபோலவே உழைப்பு முனைக்கும் அது அவசியம்தான்" என்று வி. கே. ஜான் பேசியுள்ளார்.

தீமை உண்டாக்கும் சட்டம்
பொருந்தாத் தத்துவம்
பெருந்தன்மையில்லாதது
அரசியல் அந்தஸ்தைப் பறக்க
விடுவது

என்ற வார்த்தைகளால், வர்ணித்துள்ளார், சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் ஏ. லட்சுமணசாமி (முதலியார்)

இத்தனைக் கண்டனக் கணைகள் எழும்பியிருந்தும், மசோதா, வழக்கம்போலவே நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

மானத்தை வானத்துக்கு விரட்டும் வகையதான இந்த மசோதாவை ஏன் கொண்டுவந்தார்கள் என்று நாம் அறியும் போதுதான், அதன் சூட்சமம், நமக்குத் தெரிய வருகிறது. இந்த மசோதாவை, இவர்கள் விரும்பிக்கொண்டு வரவில்லையாம், மேலிடத்தார் இட்ட உத்தரவை யொட்டியே சட்டமாக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதாம். மதுவிலக்கு மந்திரியார் என். சஞ்சீவி ரெட்டி சட்டசபையில் கூறியிருக்கிறார்,

"ராணுவப் படையினருக்கு அனுமதி வழங்கி, சலுகை தருமாறு மத்தியசர்க்கார் கட்டளையிட்டது. அதன்பேரிலேயே இந்த மசோதாவைக் கொண்டுவர நேரிட்டது."

இந்திய சர்க்கார், இந்த மசோதாவைக் கொண்டுவந்து, ராணுவப் படைகளுக்கு குடிப்பதற்கு அனுமதி கொடுங்கள் என்று கட்டளையிட்டதன் பேரிலேயே இக்காரியத்தைச் செய்யவேண்டியேற்பட்டது என்று பதில்தருகிறார், மாகாண சர்க்கார் சார்பில், மந்திரியார். அதுமட்டுமல்ல, மசோதாவை மேல்சபையில் பிரரேபித்துப் பேசுகையில்,

"ராணுவத்திலுள்ளவர்களும் மது அருந்தாமல் தடுக்கப்பட வேண்டும் என்பதுதான் எனது அபிப்பிராயம். ஆனல் தற்போதுள்ள சூழ்நிலையில் அப்படிச் செய்வது காரிய சாத்தியமாக இல்லையே!"

என்று, கலக்கத்துடன் பதில் கூறியுள்ளார்.

மத்திய சர்க்கார், மதுவிலக்கு விஷயத்தில் பயமுறுத்தியும், கூடாது என்று கூறியும் அடிக்கடி தலையிடுவதாகக் குறைபட்டுக் கூறியுள்ளனர் உறுப்பினர்கள்.

மத்திய சர்க்கார் தலையீட்டின் பேரிலேயே மாகாண சர்க்கார், ராணுவ அதிகாரிகள் மதுவருந்தலாம் என்று சட்டம் பிறப்பிக்க வேண்டி வந்ததென, மந்திரியார் கூறுகிறார். இது விஷயமாக அடிக்கடி, மத்திய சர்க்காரிடமிருந்து தாக்கீது வந்ததாகவும் கூறுகிறார். அதன் விளைவாகவே, இப்படிப்பட்ட சட்டம் பிறப்பிக்க வேண்டிய, சூழ்நிலை ஏற்பட்டதென்று, விளக்கம் தருகிறார்.

* * *

பட்டேல் பாராட்டு, பிரசாத் புகழுரை, கவர்னர் ஜனரல் களிப்பு ஆகியவைகளினூடே கடந்த ஆண்டு, மதுவிலக்கு அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. கழிந்திருப்பது, ஒரே ஒரு ஆண்டு. அதற்குள் எந்தக் கனவான்கள் எதைப் பாராட்டினரோ, எது வேண்டியது, இந்நாட்டிற்குத் தேவையானது என்று கர்ஜித்தனரோ, காந்தியாருக்குகந்தது, கட்டாயம் அமுல் நடத்த வேண்டியது என்று கூறினரோ, அதை, 'வாபஸ் பெறுக', என தாக்கீது அனுப்புகிறார்களாம்! தகவல் தருகிறார்கள், நமது மாகாண மந்திரிகள், வேதனைக் குரலுடன், விளக்கம் கூற முற்படுகிறார்கள் வெட்கம் ஒரு புறம் இடிக்க, கலக்கம் இன்னொரு புறம் குழப்ப.

மத்திய சர்க்கார் தாக்கீது அனுப்

(அடுத்த பக்கம் பார்க்க)

# வேதனைபுரிப் பயணம்

[அரங்கண்ணல்]

"ஏமாற்றிவிட்டான்! எத்தனை தடவை கெஞ்சினேன் தெரியுமா, காலில் விழுந்தேன், கருணைகாட்டுங்கள், தர்ம தாதாவல்லவா தாங்கள், தயை புரியுங்கள் என்றெல்லாம் கேட்டேன், கைவிட்டால் கதி வேறில்லை பிரபு என்று அழுதேன்! அவ்வளவுக்கும், அவன் அசையவில்லை, 'நான் என்ன செய்வேன்' என்றுமுகாரி பாடினான், 'போமய்யா, போம்! ஊரில் போய் ஏதாவது வழியுண்டா என்று பாரும்! என்னிடம் எங்கேயிருக்கிறது பணமும் நெல்லும் உமக்குத் தெரியாதா என்ன' என்று என்னையே கேட்கிறான், என்ன செய்வேன் என்று பஞ்சப்பாட்டு பாடுகிறான்!"

என்றூர் சிங்கப்பட்டி மிட்டாதார் ஜெமீன்தார் அவருக்குஉடம்பெல்லாம் துடித்தது, எத்தனை தடவை ஏதைக் கேட்டாலும் கொடுத்து வருகிறோம், 'கந்தப்பா, சுண்டல்பட்டி ஜெமீனுக்கு எடுத்து வைத்தாயா, நல்ல சம்பா அரிசியா, அப்படியானால் நாலு வண்டியையும் அவருக்கே அனுப்பிவிடு, வேண்டும்போது கேட்டால் தருவார்! அவரது அன்பும் கருணையும் ஆகா யாருக்கு வரும்!' என்றெல்லாம் பேசிவந்தவ ராச்சே, அவரா இப்படிப் பேசுகிறார் என்று ஆச்சரியம் பிறந்தது மிட்டாதார் பேச்சைக் கேட்ட கணக்கப்பிள்ளை காத்தப்பனுக்கு.

"என்ன கேட்டீங்க, என்ன சொன்னாருங்க!"

கேட்டேன், குடும்பத்திலே கொஞ்சம் கஷ்டமாயிருக்குது, குழந்தைகள் எல்லாம் வேதனைப்படுது, ஆறு வண்டி நெல் வேணும், அனுப்புங்க என்று கேட்டேன், கெஞ்சினேன். என்ன சொன்னான் தெரியுமோ, என்னப்பா உனக்கா தெரியாது, இருந்த நெல்லிலே பாதியை பக்கத்தூர் பலராமன்—அவன்தான் நம்ப அடியாள்—வாங்கிக்கொண்டு விட்டான், மிச்சத்திலே எனக்கு எவ்வளவு செலவுகள், எப்படி மிஞ்சும், இதெல்லாம் உனக்கா தெரியாது என்று பாடம் ஒப்புவிக்கிறான்.

'அப்படீங்களா!'

"நீ என்னப்பா, என் மனசு எவ்வளவு குமுறுது தெரியுமோ, நான் என்ன அவனுக்குக் குறைஞ்சவனு, ஏதோ இருந்து வருகிறோமே ஒற்றுமையா, கஷ்டம் நேர்ந்தா கவனிக்காமலா போய்விடுவான், என்று தான் நினைத்தேன். கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆகும்னு யாருக்கப்பா தெரியும்!"

மிட்டாதார் கோபமும் சோகமும் கலந்த குரலிலே பேசினர். ஜெமீனும் மிட்டாவும் அன்யோன்ய நண்பர்களாயிற்றே, அவர் இட்டது இவருக்கு சட்டமே. அப்படியிருக்கையில் இவர் இப்படிப் பேசுகிறாரே, விளைவு என்ன ஆகுமோ ஜெமீனுக்கும் மிட்டாவுக்கும் தகராறு வந்து விடுமோ, பிரிந்து விடுவார்களோ என்று கவலையுடன் நினைத்தான் கணக்கன் காத்தப்பன்.

கொஞ்சநேரம் சென்றது. மிட்டாதார் கோபம் தணிந்தது, "ஏம்பா, காத்தப்பா! நம்ம குடி ஜனங்கள்..."

"ரொம்ப, கஷ்டப்படுறாங்க எஜமான்"

"அதைக் கேக்கலெடா, கழுதை இருக்குமா, ஏதாவது!"

"என்னங்க"

"அரிசி, நெல் அகப்படுமா, கடன் கொடுப்பாங்களாடா?"

"என்னங்க எஜமான் விளையாடுறீங்க. அது அது அவதிப்படுது வயிற்றுக்கும் வாய்க்கும் போதாமே அப்படி யிருக்கும்போது......"

"ஏய்! உன்னை யோசனையா கேட்டேன் போடா! போய் நம்ம தலையாரியை வரச் சொல்லு...ஊம்!"

தலையாரி வந்தான். மிட்டாதார் உத்தரவு போட்டார். 'போ, ஊருக்குள். ஒவ்வொரு குத்தகைக்காரனையும் பார்! ஐயா சொன்னாருன்னு சொல்லு, ஒவ்வொருத்தரும் வருடா வருடம் எவ்வளவு நெல் தந்து வருகிறாங்க என்று கணக்கப்பிள்ளையை வைத்துக்கொண்டு தெரிந்துகொள். அதன்படி, எல்லாரும் இப்பவே 'அட்வான்சாக' நெல் அளக்கணும்னு சொல்லு, கேட்டுப் பார் எப்படியும் வசூலித்துவிடு!"

* * *

முன்பக்கத் தொடர்ச்சி

பியது, ஆகவே மண்டியிட்டுகாங்கள், மதுவிலக்கில் சலுகைதர வேண்டி நேரிட்டது என்று கூறுகிறார்கள்.

விசித்திரமான வெட்கம் பறிபோகக் கூடிய நிலை மட்டுமல்ல ஆட்சி புரிவது என்கிற அரசியல் அரிச்சுவடிக்கே, களங்கம் விளைவிக்கக் கூடியது, இவர்களுடைய செயல்.

ஒரு வருடத்துக்கு முன் ஒரு சட்டம் கொண்டுவருவது, மறுவருடமே அதை மாற்ற முற்படுவது ஒருவர் குடிக்கலாம் இன்னொருவர் குடிக்கக் கூடாது என்று கூறுவது என்று சட்டங்கள், சமயத்துக்குத் தக்கபடி, ஆளவந்தார்களால். கண்ணிய முள்ளவர்கள் என்று கருதப்பட்டவர்களால் மாறிக்கொண்டிருக்குமே யானால், அந்த ஆட்சியை என்னென்று சொல்வது! அதனால் விளையும், விபரீதங்களைத்தான் எப்படி வர்ணிப்பது!

கடந்த ஆண்டு மதுவிலக்கு விழா, காண வாருங்கள் என்று அழைத்த நமது மந்திரிமார்கள் இந்த ஆண்டு மதுநீக்கு விழாப் பற்றி அறிவிக்கின்றனர். அச்சமோ, கூச்சமோ இன்றிக் கூறுகின்றனர்.

ஏன் இந்த வேதனை நிலை எப்படி ஏற்பட்டது. சிந்திக்கவேண்டிய தொன்று!

*



இந்தமிட்டாதார் நிலையையும், கதையையும்காணும்தோழர்களுக்கு இதென்ன காட்டுராஜா தர்பாராக யிருக்கிறதே, என்று கேட்கத்தோன்றும். விளைந்தபின் தரவேண்டிய குத்தகை நெல்லை, அட்வான்ஸ் கேட்கும் ஆளுமா இருக்கிறான், அவ்வளவு அட்டகாசமுமா நடைபெறுகிறது இந்தச் சுயராஜ்யத்தில் என்று எண்ணலாம். ஆமாம், அத்தனையும் உண்மை, ஆனால் மிட்டாதார் என்ற இடத்தில்கொஞ்சம்மாகாணசர்க்கார் என்று வைத்துப்பாருங்கள். கதை புரியும், விஷயம் விளங்கும்.

புறப்படத்திட்டம்போட்டிருக்கிறார்களாம் தியாக மூர்த்திகள், இந்நாட்டு குடியானவ மக்களிடம்போய் 'அட்வான்ஸ்' வரிவசூலிப்பது என்று ஓராண்டு நிலவரியைக் கட்டாயமாகக்கடன் என்ற பெயரில் சர்க்காருக்குத்தந்துவிட வேண்டும் என்று சட்டம் தீட்டத் திட்டமிட்டிருக்கிறார்களாம்.

மத்திய சர்க்காரிடம், கெஞ்சிக் கூத்தாடி, நீர்ப்பாசனத் திட்டம் ஏற்படுத்த முடியவில்லை, உணவுற் பத்திக்கு வழியில்லை, கையில் பணமில்லாததால் கவலை எங்களை மாய்க்கிறது, கருணை செய்யுங்கள் ஆறுகோடி ரூபாய் அளியுங்கள். என்று மாகாண சர்க்கார் கேட்க 'இல்லை, இங்கு தலைகாட்டாதே!' என்று மத்திய சர்க்கார் மூஞ்சியிலடித்து, அனுப்பிவிட்டதல்லவா, அதன் விளைவாக இப்போது திட்டம் போட்டிருக்கிறார்களாம், சினங்கொண்டு, பின் அது தணிந்து, தலையாரியைக் கூப்பிட்டு வசூலிக்கச் சொன்ன முரட்டு மிட்டாதாரன் போல!

* * *

ஐயோ, என்ன அட்டகாசம் இது! அடுக்குமா இப்படி அவதிப்படுத்துகிறார்களே!

சரண்ட வந்தவர்கள்தானே, எப்படித் தெரியும் நம்ம கஷ்ட நஷ்டம்!

ஜனவரி, பிப்ரவரி தவிர்த்துவேறு எல்லாவரிகளையும் போட்டுவிட்டார்களே!

இப்படியெல்லாம், வெள்ளையன் பிடியில் நாடு சிக்கிக்கிடந்தக் காலத்தில், ஆளவந்த நண்பர்கள், கூறினர் கூச்சலிட்டனர், கண்டித்தனர்; வரிகொடா இயக்கம் நடத்தினர்.

மனிதன், என்ன மாடா, அடுக்கடுக்க பளு தாங்கவில்லையே என்று கூறுமல், பேசாமல் கிடக்க! முடியாது! இதை நீடிக்கவிட முடியாது! வரிமேல் வரிபோட்டு நம்மைச்சாண்டிச்செல்லும் இவர்கள் ஆட்சியை ஒழிப்போம், அழிப்போம். விரட்டுவோம் என்றெல்லாம் வீரம் பேசினர்.

சுயராஜ்யம் மட்டும் கிடைக்கட்டும், பாருங்களேன், எப்படி எங்கள் ஆட்சி நடக்கப்போகிறது என்பதை. பாலும் தேனும் ஓடாதா, பஞ்சை இருப்பானா, பட்டினிக்கூச்சல்எழும்புமா, என்றெல்லாம் கேட்டனர்.

வரிச்சுமையைப் போக்கி, வளம் நிறைந்த நாடாக்குவதே சுயராஜ்யத்தின் தத்துவம், சுதந்திரம் என்பதன் பொருள் என்று கூவினர், கர்ச்சித்தனர்.

ஆனல், ஆட்சிப்பீடம் ஏறிஇரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன.

இருந்த வரியில் எதுவும் குறையவில்லை; பன்மடங்கு அதிகமாகியிருக்கிறது!

இருந்த தொல்லைகள் எதுவும் குறையவில்லை; பன்மடங்கு விரிவாக இருக்கிறது!

இந்நிலையில், இப்போது, விவசாயிகளிடம் சென்று ஒருவருடவரியைக் கொடுத்துவிடப்பா, அட்வான்சாக வைத்துக்கொள்ளுகிறோம், எங்கள் கஷ்டத்தைக் கொஞ்சம் சமாளித்துக்கொள்கிறோம் என்று கேட்கப் போகிறார்களாம், மாகாண சர்க்கார்.

* * *

அன்னியனிடமல்லவா அடிமைப்பட்டுக்கிடந்தோம், அவனுக்கேது நம்முடைய நலனில் அக்கரை, இருப்பதையெல்லாம் சுரண்டிக்கொண்டு போவதுதானே அவனுடைய திட்டம், அதன்படியே எல்லாவற்றையும் கொள்ளைகொண்டு போய்விட்டான், இங்கு என்ன இருக்கிறது, என்று நினைக்கலாம், காங்கிரஸ் கனவான்களில் சிலர்கூட இப்படித்தான் பேசுகிறார்கள். இது, முழுப்பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முயற்சித்தாலுமே யாரோஒருதிருடன், அதைவிட மோசமும், மக்களை முட்டாள் கூட்டம் என்று எண்ணும்போக்கும் கொண்டதாகும்.

வெள்ளையன் வெளியேறிய போது நாட்டை ஒன்றும் பாலையாக்கி விட்டுப் போய்விடவில்லை. சுயராஜ்யம் தந்துவிட்டு, காங்கிரஸ் கனவான்களை ஆட்சிப் பீடம் ஏற்றிவைத்துவிட்டு அவன் வெளியேறியபோது, மாகாண சர்க்காருடைய சேமிப்பு நிதி (Reserve Fund) யாக யிருந்தது ரூ 55 கோடி. இதில் இப்போது, என்ன இருக்கிறது தெரியுமா, 22 கோடிதான்; சமாளிக்க முடியா நிலையேற்பட்டு தொல்லைகள், தலைக்கு மீறிப் போய்விட்டன என்று கூறப்படுமேயானால், அப்போது தங்கள் நிலையைச் சமாளிப்பதற்காக என்று ஒவ்வொரு ஆண்டும் சேமிக்கப்பட்டு வைத்துவருவது தான் இந்த நிதி. இது வெள்ளையன் வெளியேறியபோது 55 கோடியாக இருந்தது. ஆனால்தேசியத் திருவாளர்கள் ஆட்சிப பீடம் ஏறியபின் 22 கோடி ரூபாயாகக் குறைந்துவிட்டது. இரண்டு ஆண்டுகளில் 33 கோடி ரூபாய்கள், அந்நிதியிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது. இவர்களால் செலவழிக்கப்பட்டிருக்கிறது!

மக்களிடையே மகிழ்ச்சி மலரவில்லை, கஷ்டம் கழுத்தை நெரிக்கிறது, இந்நிலையில் என்ன செய்வது, வரியை உயர்த்தலாமா, அது கூடாதே, என்ற நல்லெண்ணத்தின் பேரிலேயே, நம்மை ஆளவந்தவர்கள் அந்நிதியிலிருந்து எடுத்துச் செலவழித்திருப்பார்கள் என்று நினைக்கத் தோன்றலாம்.

அப்படியாவது நடந்திருக்கிறதா, வரி எதுவும் உயர்த்தப்படாமல் இருந்திருக்கிறதா என்று பார்த்தால் கிடைக்கும் விடை, வேடிக்கையாகவும், வேதனையூட்டக் கூடியதாகவும் இருக்கும்.

வெள்ளையன் வெளியேறியபோது இருந்ததைவிட இப்போது, மாகாண சர்க்காரின் கஜானாவுக்கு ஐந்து கோடி ரூபாய் அதிகமாகவரி வருகிறது.

அப்போது இருந்த விற்பனைவரி ரூபாய்க்கு அரைத் தம்பிடி. ஆனால் இப்போதோ, ரூபாய்க்கு மூன்று தம்பிடி! இதன் மூலம் அதிகமாக, மாகாண சர்க்கார் பொக்கிஷத்துக்குச் சேரும் தொகையோ கிட்டத்தட்ட 10 கோடி ரூபாய்.

வந்த வருமானம் குறையவில்லை, இருந்த வரியும் குறையவில்லை

(10-ம் பக்கம் பார்க்க)

திராவிட நாடு

ஞாயிறு 4—12—49 [காஞ்சி

## முகாரியால் முடியாது!

மாகாணங்கள் மாறி நிற்கின்றன!

தலைகால் புரியாமல் நடக்கின்றன!

தனி நாடாகி விட்டதாகவே நினைக்கின்றன!

ஒத்துழைப்பில்லை! ஒருமித்த கருத்தில்லை!!

இவ்வண்ணம் சோகக்குரலெழுப்பியிருக்கிறார், சோர்வுள்ளத்துடன் பேசியிருக்கிறார், இந்தியா எமது தேசம் என்ற நினைப்பை மறந்துவிட்டனர், சொந்த மாகாணங்களையேத் தங்கள் நாடு என்று நினைக்கத் தொடங்கிவிட்டனர், தங்கள் மாகாணம் சொந்த ராஜ்யம் என்று எண்ணங் கொண்டுவிட்டனர், ஒத்துழைப்பதில்லை, முன்போல சொன்னதைக் கேட்பதில்லை, சொந்தமாக ஏதேதோ செய்கின்றனர் என்று ஓலமிட்டுள்ளார்! அண்மையில் வேதனையுடன், இத்தகைய உண்மை நிகழ்ச்சிகளை வெளியிட்டிருப்பவர், சாதாரணமான ஆளல்ல, சமய சஞ்சீவியல்ல, இந்தியாவின் பிரதமர், இந்தியா ஓரே நாடு என்ற போர்வையைப் பிரிக்கவும் விரும் பாதபெரிய மனிதர் பேசியிருக்கிறார், வேதனைக் குமுறல்களைக் கொட்டியிருக்கிறார், அண்மையில் ரூர்கி தாம்ஸன் இன்ஜினீரிங் பல்கலைக் கழக பட்டமளிப்பு விழாவிலே பேசியபோது!

பண்டிதரின் பேச்சிலே கலக்கமும், இப்படியிருந்தால் என்ன ஆவது என்ற ஏக்கமும், இப்படியா நடப்பது என்ற சோகமும் கலந்திருக்கிறது!

ஐக்கியமே தேசத்தின் ஆத்மா!
தனி மாகாணம் கேட்பது துரோகம்!

பிரிந்துபோக நினைப்பவன் துரோகி!

நாட்டைச் சீர்குலைக்கும் நாசகாரியம் அது!

இன்னொருவர், ஜோரத் மாணவர் மாநாட்டிலே பேசுகையில் இப்படி வெளியிட்டுள்ளார், முன்னிருந்த ஒற்றுமையில்லை, தனித் தனியாகப் பிரிந்து போவதில் முனைந்துவிட்டனர், அப்படிச் செய்பவரானா, அது மகத்தான துரோகமல்லவா, என்று கொஞ்சம் முகாரியும் மோகனமும் கலந்து பேசியுள்ளார். இவரும் சாமான்யரல்ல, இந்திய காங்கிரசின் தலைவராக இருந்தவர், நாட்டின் பெரிய தலைவர்களிலே ஒருவர், காந்தியாரின் அத்யந்த சீடர்—ஆச்சார்ய கிருபளானிதான் இவ்வண்வம் பேசியிருக்கிறார். இனவாரியாகவோ இன்னபிற வேற்றுமைகளைக் காட்டியோப் பிரிந்துபோக நினைப்பது துரோகம், நாட்டைச் சீர்குலைக்கும் நாசகாரியம், நல்லது எண்ணாத செயல், என்று தூற்றல் பாடமும், சோகக் கதையும் சேர்த்து ஒப்பித்திருக்கிறார்.

x x x

ஒற்றுமையே உயர்ந்த வழி!
பிரிவினை எண்ணம் கூடாது!
கேடு விளைவிக்கும் கேட்டது செய்யும்!
மத்திய சர்க்காருக்கு மதிப்பு கொடுங்கள்!

இது ஒருவர் உபதேசம். அஸ்ஸாமிலே பவனிவரும், இந்திய கவர்னர் ஜனரல், அஸ்ஸாம் மாகாண மக்களுக்கு விடுத்திருக்கும் வேண்டுகோள் இது. பிரிவினை எண்ணம் கொள்ளாதீர்கள், பேசாதீர்கள் அது போலெல்லாம், எண்ணத்தால் எண்ணனுந்தி, என்பதாக இதோபதேசமும், மத்திய சர்க்காருக்கு அடங்கியொடுங்கி நடப்பதே மகத்தான தேசத்தொண்டுஎன்ற மாண்பு விளக்கமும் தந்திருக்கிறார் அவர். எல்லையில் இருக்கும் நீங்கள் ஏதாவது தாறுமாறாக நடந்தால் ஆபத்து முதலில் உங்களுக்குத்தான், அன்னிய ஆக்கிரமிப்புக்கு அடிபணிய நேரிடும், ஆகவே இந்திய சர்க்காரிடம் என்றும் போல இருப்பதுதான் நல்லது என்று அவர்களுக்கு உபதேசத்துடன் சிறிது மிரட்டலையும் கலந்துதந்துள்ளார்.

தனி நாடாகி விட்டதாகத் தங்களைக் கருதிக்கொண்டு விட்டன, கவனிப்பதில்லை மத்தியசர்க்காரை, இஷ்டம் போல நடந்து வருகின்றன என்று இந்தியாவின் பிரதமர் ஒருபுறம் பேச, தனியாகப் பிரிந்து போவது துரோகம், நாட்டைச் சீர்குலைக்கும் நாசகாரியம், நல்லதைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்குவது என்று ஆச்சாரிய கிருபளானி இன்னொரிடத்தில் முழக்கமிட, எல்லை மக்களே தொல்லையை வரவழைத்துக் கொள்ளாதீர்கள், பிரிந்து சென்று வாழ்வோம், மத்தியசர்க்காரை மதியோம் என்று நடவாதீர்கள் அது நல்லது செய்யாது உங்களை இன்னொருவரின்கீழ் அடிமையாகச் செய்துவிடும் என்று இந்திய கவர்னர் ஜனரல் இதோபதேசம் செய்ய,

இன்று, நாட்டின் நானுபக்கங்களிலும், மந்திரிகளாயிருப்போரும் சரி, மக்கள் தலைவர்களாயிருப்போரும் சரி, மாதவமேனனிலிருந்து இந்தியப் பிரதமர் வரை எல்லோரும் இன்று, சென்றவிடங்களிலெல்லாம், இவ்வண்ணமே முழக்கி வருகின்றனர். முழக்கங்கள் இடத்துக்கேற்றவாறு, வேளைக்கேற்றபடி, பேசுபவரை பொட்டி இருந்து வருகிறது.

ஒவ்வொரு தலைவரும் ஒவ்வொரு முறையில் பேசினாலும், பேசும் எல்லோரும் ஓரே ஒரு விஷயம் பற்றித்தான், பேசுகின்றனர். விஷயம் ஒன்றாக யிருக்கிறது, வேளைக்கும் இடத்துக்கும். ஏற்றபடி அதை எடுத்துச் சொல்லப்படுகிறது என்றாலும், எல்லோர் இதயத்திலும் எழும்பும் முகாரியாகவே இருக்கிறது அது.

பிரிந்துபோக நினைக்கிறீர்களே, இது அடுக்குமா!

என்று, ஓலமிடுவது போலவே இருக்கிறது ஒவ்வொருவர் பேச்சும், வார்த்தைகளும்.

மத்திய சர்க்கார் பிடிப்பு கூடாது, தனித்து சுதந்திரமாக இருக்க வேண்டும், தனக்காகத்தான் வாழவேண்டும், தன் மக்கள் நல்வாழ்வு பெறவேண்டும் என்ற பிரிவினைப் பிரியம், இங்குமட்டும் என்றல்ல, ஆங்காங்கும், எழும்பி வளர்ந்து வருகிறது. அஸ்ஸாமியரிடையிலே ஆசை! வங்க மக்களிடையே துடிதுடிப்பு! எழும்பிவிட்டது, நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறது.

ஆங்காங்குள்ள அந்தந்த மாகாணங்களை நிர்வகிப்பவர்கள் காங்கிரஸ்காரர்கள்தான் என்றாலும், கோட்டைக்குள்ளேயே குத்து



வெட்டு என்பார்களே, அதைப் போன்ற நிகழ்ச்சிகள் ஆரம்பமாகிவிட்டன.

மத்திய சர்க்காருக்கு எனிவ்வளவு பேராசை என்ற கேள்வியும், எவ்வளவு கட்டுகிறோம் வரி அதில் இதுதானா பங்கு எங்களுக்கு என்ற அதிருப்தியும், அனாவசியமாகத் தலையிடுகிறார்கள் எங்கள் வேலையில் என்ற கோபமும், மாகாணங்களிடையே வெகு வேகமாகப் பரவி வருகிறது.

இந்த நிலையை அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்ற விவாதத்துக்குப் பதிலளித்துப் பேசிய டி. டி. கிருஷ்ணமாச்சாரி கூறுகிறார்,

மாகாண நிதி மந்திரிகள் புகார் செய்கின்றனர்.

புது அரசியல் மூலம் எல்லாம் போகிறதாம்!

இப்படிச் சொல்வது விஷமத்தனம். என் செய்வது, சொல்லித் திரிகிறார்களே!

மத்திய — மாகாண சர்க்கார்களிடை போட்டி இல்லை!

புது அரசியலமைப்பு அமுலுக்கு வந்ததும், மாகாணங்கள் ஏதற்கும் இலாயக்கற்றவையாகிவிடுகின்றன, வருவாய் இல்லாது கஷ்டப்படும்படி நேரிடும் என்று மாகாண நிதி மந்திரிகளிலே ஓரிருவர் வெளிப்படையாகப் பேசியதாகவும், இது விஷமத்தனம் என்றும், சரியில்லாதது என்றும் சீறிப் பாய்ந்து பேசியிருக்கிறார், அவர், அரசியல் நிர்ணய சபையில். அவரது கூற்று, ஆங்காங்குள்ள மந்திரிமார்களிடையே அவ்வளவு அதிருப்தி, மத்திய சர்க்கார் மீது துவேஷமும் பரவி வருகிறது என்பதைக் காட்டுகிறது.

ஏன் இங்கிலை என்பதற்கும், மாகாண சர்க்கார்களின் அதிகாரங்களை மத்திய சர்க்கார் தன் வசப்படுத்திக்கொள்வதாகஅவர்கள் சொல்லித் திரிகின்றனர் என்று குற்றம் சாட்டுகிறார்.

மாகாணங்களிடை மத்திய சர்க்கார் எல்லா அதிகாரங்களையும் கைப்பற்றிக்கொண்டுவிட்டது என்ற அதிருப்தியும் அசூயையும் பரவி வருகிறது.

மத்தியசர்க்கார் மாகாணங்களிடமிருந்து வசூலிக்கிறார்களல்லவா, வருமான வரி, அதில் போதுமான பங்கு தரவில்லையென்பது பல மாகாணங்களுடைய குறைபாடுகளில் ஒன்றாகும். இது, வெகு வேகமான அளவில், வளர்ந்திருக்கிறது.

அவ்வளவு தூரம் மாகாணங்களிடை புகைச்சலும் பொறுமலும் எழும்ப ஆரம்பித்திருக்கிறது! இந்த அதிருப்தி, மூடிவைக்கப்படலாம் கட்சிப்பற்று காரணமாக. ஆனால் இது என்றும் அடங்கிவிடாது. என்றாவது ஒரு நாள் வெடித்தே தீரும், இன்றில்லாவிட்டாலும், எதிர்காலத்தில். இதை யாரும் மறுக்கமுடியாது, தலைவர்களின் முகாரி இந்த நிலையைத் தவிர்த்து விடாது—போக்கி விடாது.

✻

தேயிலைத் தோட்டத்திலே!

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

உழைத்து உருக்குலையும் ஒரு சமுதாயத்தைப் புறக்கணிக்க நினைப்பதோ, வடிகட்டி விரட்ட முயல்வதோ, இடையூறுகளுக்குள்ளாக்குவதோ, சரியல்ல — நேர்மையுமல்ல, நீதியுமாகாது.

நவம்பர் முதல் தேதி முதல், இந்தியாவிலிருந்தும் இலங்கையிலிருந்தும் முறையே வந்து செல்பவர்கள் 'பாஸ் போர்ட்' வைத்திருக்க வேண்டும் என்ற சட்டம் அமுலுக்கு வருகிறது. ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்குச் செல்ல, இம்முறை, இலங்கையில் மட்டும் என்றல்ல எல்லா நாட்டிலும் தான் கையாளப்படுகிறது. ஆனால், ஏராளமான பேர்களுக்கு இலங்கை பிரஜா உரிமை கல்காமலிருந்தால், எவராது இலங்கையிலிருந்து இங்கு வந்து தனது உறவினர்களைக் கண்டு பின்னர் திரும்பும்போது, உள்ளே விட முடியாது என இலங்கை சர்க்கார் மறுக்கலாம்.

இலங்கையில் வாழும் ஒருவர், இந்தியாவிலிருக்கும் தன் பெற்றோருக்கு 'பணம்' அனுப்ப வேண்டுமென்றால், அதற்குள்ள தடைகள், அதிகமாயிருக்கின்றன.

இங்குள்ள பல குடும்பங்கள், கடல் கடந்து சென்றிருப்போரின் பணத்தை எதிர்பார்த்தே காலம் தள்ள வேண்டியவர்களாக யிருக்கின்றனர். ஒரு மாதம் சரிவர பணம் கைக்கு வரவில்லையென்றால் அவர்கள் வாழ்வில் புயல்தான், கண்களில் நீர்தான்!

இந்த நிலைமைகள் மாறவேண்டும், இல்லாவிடில் அமைதியான குளத்தைக் குழப்பி விட்டுவிட்டு, அதில் கிடந்து தத்தளிப்பவன் கதையே ஆகிவிடும்.

இதைக் கவனித்து ஆவன செய்ய வேண்டுமென ஜனவரியில் இலங்கை செல்லும் இந்தியப் பிரதமர் நேருவைக் கோரி, சென்னை சட்டசபை ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

வெளிநாட்டில் வேதனைப்படும் தன்னாட்டு மகனின் கஷ்டம் கண்டு, கண்ணீரைப் பார்த்து அதைப் போக்கவேண்டும் என்ற அளவுக்கு மத்திய சர்க்காரைத் தூண்டும், உணர்வு, மாகாண சர்க்காருக்கு இப்போதாவது ஏற்பட்டதுகுறித்து பாராட்டுகிறோம்.

நேரு விஜயத்தால் நிலைமை சரிப்படுமா, நேருவுக்கு அவ்வளவு பொறுப்பு ஏற்படுமா? பொறுத்திருந்து பார்ப்போம் கன்னித் தமிழ் நாடிருந்தும், கண்ணீரைப் போக்க வழியற்று, கடல் கடந்து சென்று, கதி கலங்கி நிற்கும் அவர்கள் வேதனையைத் தீர்க்கவாவது, ஏதாவது செய்கிறார்களா, இந்த ஆளவந்தார் என்பதை!

●

இதழ் முகப்பிலே வெளியிட்டிருப்பது காஞ்சியில் கல்லூரியொன்றை நிறுவவேண்டும் என்ற ஆர்வத்துடன் தனக்கென இருந்த சொந்தமான ரூபாய் 50,000-த்தையும் சுயநலம் கருதாது அள்ளி வழங்கியிருக்கும் தோழர் சி. கந்தசாமி அவர்களுடைய உருவமாகும். வெள்ளிரதத்துக்கும், வீண் விழாக்களுக்கும், அக்கார வடிசலுக்கும், அர்த்தசாத்திரி பூஜைக்கும், ஆறு கால நைவேத்யத்திற்கும் அள்ளி வழங்கும் மகான்கள் இருக்கும் நாட்டிலே, எதிர்காலம் சீர்பெற வேண்டுமென்ற சீரிய நினைப்புடன் தாராளமாக முன்வந்து, நன்கொடை அளித்திருக்கும், பெருந்தகையை காம் மனமாரப் பாராட்டுகிறோம். வாழ்த்துகிறோம்.

வேதனைபுரிப்பயணம்

7-ம் பக்கத் தொடர்ச்சி

அதற்குப் பதில் முன்பைவிட அதிகமாகி யிருக்கிறது—கோடிக் கணக்கில்! இருந்தும், இவர்களுக்கு நிர்வாகச் செலவுக்குப் பணம் போதவில்லை, நீர்ப்பாசன அபிவிருத்திக்கு வகையில் காசில்லை, கடன் கொடுங்கள் என்று மத்திய சர்க்காரைப் பிச்சை கேட்கும், நிலை ஏற்பட்டிருக்கிறது.

* * *

மாகாண சர்க்கார் கடன் கேட்க, இல்லையென்று மிரட்டிவிட்ட மத்திய சர்க்கார் இருக்கிறதே, சுயராஜ்யத் தலைவர்கள் பட்டேல் நேரு வீற்றிருக்கும் இடம், அங்குள்ள நிலைமை என்ன தெரியுமா?

அங்கும் கடன் வாங்கும் நிலைதான்! வேடிக்கை மட்டுமல்ல, விசித்திரமாகக்கூட இருக்கிறது, காங்கிரஸ் ராஜ்யத்தின் காட்சி!

சுதந்திரம் வந்தபின் இதுவரை இந்திய சர்க்கார், சர்வதேச நாணயச் செலாவணி பாங்கிலிருந்தும், சர்வதேச பாங்கிடமிருந்தும் கடன்கள் வாங்கியிருக்கிறது.

சர்வதேச பாங்கிடம் கடன் வாங்கியிருக்கும் விபரம் இது:-

1949-ஆகஸ்டு 18-ல் 340-லட்சம் டாலர்

1949-செப் 29-ல் 100-லட்சம் டாலர்

வரவேண்டிய நிலையில் 220 லட்சம் டாலர்

டாலர் மதிப்பை பிரிட்டனின் நாணயமாற்று விகிதப்படி யொட்டி இந்தியாவும் குறைத்துக் கொண்டால் முன்பு ரூ 3—5—4 கொண்டது ஒரு டாலர் என்றிருந்தது போக இப்போது ரூ 4—12—0 கொண்டது ஒரு டாலர் என்று உயர்ந்திருக்கிறதே! இதன்படி கணக்குப் பார்த்தால், இந்தியா சர்வதேசபாங்கியிடம், கிட்டத்தட்ட 32-கோடி ரூபாய்கள் கடன்வாங்கியிருக்கிறது.

இது தவிர்த்துச் சர்வதேச நாணயச் செலாவணி பாங்கில் (International monetary Bank) இருந்தும் சுமார் 40-கோடிரூபாய்க்கு மேல் கடன்வாங்கியிருக்கிறது.

இவ்வளவுதூரம் கடன்வாங்கியும், நிலைமை சரிப்பட்டிருக்கிறதா, தொல்லை நீங்கிவிட்டதா என்றால், பலன் எதுவும் ஏற்படவில்லை. மார்ஷல் திட்டப்படி கடன் கிடைக்குமா, அமெரிக்க மகேசுவரர்கள் மனந் திறந்து பணம் கொண்டுவந்து தருவார்களா, என்ற ஏக்க நிலையே நீடிக்கிறது!

இத்தனை வேதனை, ஏற்பட்டிருக்கிறதல்லவா, இதுயாவும் பிரிட்டனின் கீழ் இந்தியா இருநூறு ஆண்டுகள் அடிமைப்பட்டுக் கிடந்ததன் விளைவுதான், என்று கூறத்தோன்றலாம். அதையும், ஆராய்ந்தால், கிடைக்கும்பதில் இன்னும் வேதனையூட்டக்கூடியதாகஇருக்கும்.

வெள்ளையன் வெளியேறிய பொழுது,தான் இந்தியாவுக்குத் தரவேண்டியது என்று சொல்லிவிட்டுப் போன ஸ்டர்லிங் கடன் 1,750 கோடி ரூபாயாகும்.

போர்க்காலத்தில், நாம் எல்லாம் உதவினோமல்லவா, போர் வெற்றி பெற வேண்டும் என்ற ஆசை காரணமாகப் பிரிட்டனுக்கு அந்தத் தொகைக்குத்தான் ஸ்டர்லிங் கடன் என்று பெயர். அப்படி நாம் உதவிய அந்தக் கடன் மொத்தம் 1,750 கோடி. இதைத்தான் தருவதாக, பிரிட்டன் நமக்கு, இந்திய சர்க்காருக்கு ஒப்பந்தம் மூலம் உறுதிமொழி செய்து கந்து விட்டு வெளியேறினர்.

இந்தத் தொகையிலும் இதுவரை ரூ 820 கோடி கரைந்திருக்கிறது. பிரிந்துபோன பாகிஸ்தானின் பங்கு ரூ 187 கோடி போக மீதித்தொகை இந்தியாவின் பற்றுக் கணக்கிலேயே குறிக்கப்பட்டிருக்கிறது.

இதுமட்டுமல்ல, சுயராஜ்யம் தந்து விட்டு பிரிட்டிஷார் வெளியேறிய போது ரிசர்வ் பாங்கில் ரூ 310 கோடி வைத்துவிட்டுப் போனார்கள். அது இப்போது 100 கோடியாக ஆகியிருக்கிறது. இரண்டு ஆண்டு ஆட்சிக்காலத்தில் ஆளவந்தார் வசம், 210 கோடி ரூபாய்கள் பற்று ஆகியிருக்கின்றன.

சுயராஜ்யம் வந்ததும் சுகவாழ்வு மலரப் போகிறது, வீண் செலவுகள் யாவும் ஒழிக்கப்பட்டு, இன்பம் முகிழ்க்கப் போகிறது என்று மார் தட்டி,வீரம் பேசினர்களே, காங்கிரஸ் தலைவர்கள் அவர்கள் ஆட்சியின் காட்சிகள் இவை!

* * *

மாகாண சர்க்காரும், முன்னிருந்த நிலையைவிட மோசமானதாக மாகாண நிதி நிலையை ஆக்கியுள்ளார்கள். அதைப் போலவே மத்திய சர்க்காரும் செய்துள்ளார்கள். இரண்டு இடத்திலும், வெள்ளையர் காலத்தைவிட, வரவு அதிகமாகியிருக்கிறது, இருந்தும் கடன் கேட்கிறார்கள். மாகாண சர்க்கார், மத்திய சர்க்காரை நோக்க, மத்திய சர்க்கார், அமெரிக்காவைப் பார்க்க விசித்திரமான வேதனைநிலை,இரண்டு ஆண்டு காங்கிரஸ் ஆட்சிக்காலத்தில் ஏற்பட்டிருக்கிறது! இரண்டு ஆண்டு சுயராஜ்யம், மக்கள் வாழ்வில்,மகிழ்ச்சியை மலரவைக்கப் போவதாகக் கூறப்பட்ட காங்கிரஸ் ராஜ்யம், மக்கள்மீது வரிச்சுமையைச்சுமத்தியது மட்டுமின்றி, இருந்த சொத்தையும் கரைப்பதோடுமட்டுமில்லாது, இன்னொரு இடத்திலும் கடன்மேல்கடன் வாங்கிக்கொண்டிருந்தும், "பணமில்லை, பணமில்லை" என்ற பாட்டையே பாடிக்கொண்டிருக்கிறது!

* * *

நீர்ப்பாசனத் திட்டம், உணவு உற்பத்திப் பெருக்கம் ஆகியவைகளுக்குப் பணமில்லை என்று இருப்பதை எடுத்து ஏப்பம் விட்டும் போதாது திண்டாடும் மாகாணசர்க்கார், மத்தியசர்க்காரை ரூ. 6 கோடி கடன் கேட்டிருக்கின்றனர்.

ஒரு வருடத்துக்கு 320 கோடி ரூபாய் வருமானம் வந்தும், மாகாணங்களிலிருந்து ஏராளமான வரிப் பணத்தைச் சுரண்டிச் சென்றும், வெளியிலிருந்து கடன் வாங்கியும் கூட, போதாது தவித்துத் தத்தளிக்கும் மத்திய அரசாங்கமோ 'இல்லை' என்று கைவிரித்து விட்டது.

ஜெமீனுக்கு என்னவெல்லாம் தருகிறோம், எதையும் அங்கு தானே அனுப்பிவைக்கிறோம் அவரது மதிப்பைப் பெற, என்று நினைத்து, வீட்டிலே அல்லல் ஏற்பட்டதன் விளைவாக, ஆறு வண்டி நெல் வேண்டுமென மிட்டாதார் கேட்க, இல்லையென்று ஜமீன் கூறியதும், சீற்றமும் சினமும் உருவெடுத்ததே மிட்டா



தாருக்கு, அதுபோல மாகாண சர்க்காரும் சீறினர்! கோபாலர் கொக்கரித்தார், வருமானங்களை யெல்லாம் கொட்டித் தருகிறோம், இருந்தும் வக்கற்றவர்களாக்குகிறது, மத்திய சர்க்கார் எங்களையென்று சீறினர், சில பல விடங்களில் பேசினர்!

கோபம் முடிந்ததும், மிட்டாதார், இட்டாரே கட்டளை தலையாரிக்கு; அதைப்போலத் திட்டம் தீட்டியிருக்கிறார்கள், விவசாயியிடம் போய்க் கடன் கேட்பது, கட்டாயப் படுத்தி வசூலிப்பது என்று!

ரூ. 10-க்குமேல் நிலவரிசெலுத்து பவர்களுக்கு ஒரு ஆண்டு கிஸ்திப் பணம் எவ்வளவோ, அதைச் சர்க்காருக்கு இப்போதே கட்டிவிடவேண்டும்!

அப்படி வசூலிக்கப்பட்ட பணத்தை ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர்தான் சர்க்கார் தரும்.

அதற்கிடையில் எந்த விதத்திலும், எப்படிக் கேட்டாலும் தரமுடியாது, கடன் ஏதாவது ஏற்பட்டு, கோர்ட்டில் தீர்ப்பளிக்கப்பட்டு, சொத்துக்கு ஏதாவது தீங்கு ஏற்பட்டால்மட்டிலுமே, தரப்படலாம்.

இதுதான் சர்க்காருடைய கடன் வாங்கும் திட்டம்.

* * *

பத்து ரூபாய்க்கு மேல் வரி செலுத்துபவர்களெல்லாம் ஒரு வருட வரியைக் கட்டாயக் கடனுக்குக் கட்டிவிட வேண்டுமாம்! பத்து ரூபாய், ஆளவந்தார்களின் பார்வையில் அலட்சியமானதாகப் படலாம், ஆனால் அரைப்பட்டினி அப்பர்களுக்கு, கிராம மக்களுக்கு, அந்தப் பத்து ரூபாய், எவ்வளவு வேதனை போக்கக்கூடிய மோகினி தெரியுமா!

மாளிகை வாசி மகிழ்ந்து வாழ்கிறான், பெரும் பண்ணைக்காரன் பூரித்துக் கிடக்கிறான், அவர்கள் பக்கம் திரும்பவும் நினையாத ஆளவந்தார் அரைப் பட்டினிகளை நோக்கி அன்னக் காவடி கட்டுகின்றனர்.

அனைவரும் ஒரு வருட வரியை 'அட்வான்ஸ்' தாக்கடவீர், என்று ஆக்ஞை பிறப்பிக்கத் திட்டமிடுகின்றனர்!

நிலம் வைத்து யாவருமே, இங்கு சுகபோகிகளாக இல்லை, நிலச் சொந்தக்காரர்களாக யிருக்கும் மத்தியதர வர்க்க மக்கள் நிலையிருக்கிறதே, அது, ஆட்சியாளர் எண்ணுவது போலச் சுகக்கோட்டங்களாகவும், தொல்லையில்லா மலர்சோலையாகவும் இல்லை!

விவசாயி, வயலில் இறங்கிய நாள் முதல் அறுவடை காணும் தினம்வரை, வாடியுழலும், நாட்களை நினைத்தால், நெஞ்சில் வைத்துப் பார்த்தால் வேதனை விளங்கும். போருக்குப் பின் நெல் விலை உயர்ந்திருக்கிறது, உண்மைதான் இது, ஆனால் அதே அளவில், அவனுக்குத் தேவையான காளைமாடுகள் விலை ஒன்றுக்கு நான்கு மடங்காகியிருக்கிறதே, மண்வெட்டி ஏர்க்கலப்பை ஏரு இன்னபிற பொருள்களின் விலையும், உழைப்பாளிக்குத் தர வேண்டிய கூலியின் மடங்கும் அதிகரித்திருக்கிறதே! இத்தனையையும் சமாளித்துப் பின், மிச்சப்படும் நெல்லைக்கொண்டுதானே, அவன் வாழ்க்கை நகர்த்தப்படவேண்டியிருக்கிறது. மனைவிக்குச் சேலை மகளுக்குச் செலவு, மகன் படிப்புக்குப் பணம், வெளியூர் செல்லச் செலவு, நிலவரி, வீட்டிற்கு வேண்டிய உப்பு, புளி, மிளகாய் முதலிய பொருள்கள் எல்லாவற்றையும் வாங்குவதற்கான சூழ்நிலையில் அவன் இருக்கிறான்.

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார், என்ற மூதுரையின் இலக்கணமல்லவே இப்போதிருக்கும் விவசாயியின்,நிலை!எத்தனை இடங்களிலேதினசரி உள்ளக் குமுறல்கள், வேதனை விருத்தங்கள் எழும்புகின்றன!

இது அறிந்தும் ஆளவந்தார், மத்தியதரவர்க்கமாகயிருந்த, மனிதனுகப் பிறந்தும் சஞ்சலமே வாழ்க்கை என்று தவித்து நிற்கும் குடியானவர்களிடம் சென்று கடன் வாங்கப் போகிறார்களாம்!

போய்க்கேட்டால், போக்கத்தவர்கள், போயும் போயும் எங்களைத் தானா தேடிவரவேண்டும், எங்களிடம் இருப்பதைத் தருகிறோம், வேண்டுமானால் அதை எடுத்துச் செல்லுங்கள் என்று கூறி உடைந்து கிடக்கும் ஏர்கலப்பை, இளைத்து இன்றோ நாளையோ என நிற்கும் காளைமாடு, இவைகளைத்தானே அவர்கள் காட்டமுடியும்! இது, ஏனோ, தென்படவில்லை இவர்களுக்கு —ஏழையின் ராஜ்யம் என்று பெயர் சொல்லி பதவிபீடம் அமர்ந்துவிட்ட மகானுபாவர்களுக்கு!

விவசாயி ஏதோ வரி செலுத்துகிறான், என்றால் கொண்டா பணம், கிடைத்தவரையில் ஆதாயம் என்ற எண்ணமா, பிறப்பது—அதுவும் இவர்களுக்கு!

இங்கு வாழும் எல்லாக்குடியானவர்களும் என்ன, பெரிய பெரிய மிராசுதாரர்களா! பண்ணைகளா! வயலையேகாணாது, நகர்ப்புறங்களில் பொழுது போக்கும் சீமான்களா, செல்வர்களா! இல்லையே, எல்லாரும் வறுமையின் பிம்பங்கள்தானே, வழியும்வக்குமற்றுத்திகைத்து,ஏன்பிறந்தேன் என்று ஓலமிட்டு நிற்பவர்கள் தானே!

இதையெல்லாம் முன்பு பேசித்திரிந்த, வெள்ளையனை விரட்ட, முழக்கமிட்டபோது கர்ஜனை எழுப்பிய கனவான்கள், இப்போது, ஏமாந்தவன்மீது ஓட்டகச்சவாரி செய்யப் புறப்படுகிறார்கள்!

* * *

இராணுவச் செலவு என்ற பெயராலும், கவுரவம் காப்பாற்றப்படவேண்டும் என்று காரணங்கூறியும், கோடிக்கணக்கான ரூபாய்களைகுளத்தில் கொட்டுவதுபோல், செலவழிக்கின்றனர் இந்திய சர்க்கார். 320-கோடி ரூபாய் வருமானத்தில் 157 கோடி ரூபாயை ராணுவச்செலவுக்கென இந்திய சர்க்கார் செலவழிக்கிறது!

ஆறுகோடி ரூபாய்களுக்காக விவசாயிகளைப்போய் வேதனைபடுத்த புறப்படுகிறார்களே, நமது மாகாண சர்க்கார். போலீசுக்கு என வெள்ளையன்ஆண்டகாலத்தைவிட இப்போது எவ்வளவு அதிகமாகச் செலவிடுகிறார்கள் தெரியுமா! ஒரு லட்சம் பத்து லட்சங்கூட அல்ல, நான்கு கோடி ரூபாய்கள் முன்பைவிட அதிகமாக போலீஸ் நிர்வாகத்துக்கென இப்போது செலவழிக்கிறார்கள்!

இந்நிலையில் தங்கள் தர்பார் நீடிக்கவும், தட்டிப் பேசினால் சிறையில் தள்ளவும், தற்காப்புக்கென்ற

(அடுத்த பக்கத்தில்)

# தேயிலைத் தோட்டத்திலே!

"தேயிலைத் தோட்டத்திலே" என்ற பாட்டு, சில பல ஆண்டுகளுக்கு முன்பு, நாட்டிலே எழும்பியதே, அது இன்னும் எல்லோருடைய மனதைவிட்டு மறைந்திருக்க முடியாது. தேயிலைத்தோட்டத்திலே, கங்காணியின் கொடுமை, வேலையின் கடுமை ஆகியவைகளின் வேதனை தாங்காது, வெதும்பி, விம்மி, தேம்பி, திகைக்கும், தொழிலாளரின் சோக நிலையைச் சித்தரித்த இதய கீதம் அது

பொன் விளையும் நாடிருந்தும், புசிக்க வழியில்லாது, ஏழைகளாய் கூலிகளாய் கடல் கடந்து இலங்கையிலே அவதிப்படும் தமிழர்களின் தொல்லைகளைப் படம் பிடித்துக்காட்டும் பாடல் அது.

(முன் பக்கத் தொடர்ச்சி)

அதிக பணத்தை பாதுகாப்பு என்ற பெயரால் செலவிட்டு விட்டு, பசி பசி எனத் துடிக்கும் பஞ்சைகளை பராரிகளை பட்டினிப் பட்டாளங்களை நோக்கிப் படையெடுக்கத் திட்டம் தீட்டுகின்றனர், பணம் வசூலிக்க வழி தேடுகின்றனர்!

வெளிச்சத்தில் நின்று வெள்ளையுடையுடன் கேலிச் சிரிப்புச் சிரித்து, கொவ்வை இதழ் எங்கே, கோமளவல்லி யார், எந்தக் 'கோட்டை'யை வாங்கலாம் என்று பூரித்து நிற்கும் பண முதலைகளுக்குப் பராக்குக் கூறிவிட்டு, வேதனைக் குகைகளில் திக்கித்திண்டாடும் கூட்டத்தை நோக்கி 'அன்னக் காவடி' என்ற போர்வையில், அதட்டிப் பணம் கேட்கப் புறப்படுகிறார்கள்!

ஆளவந்தார்கள் புறப்படுகிறார்கள், ஆட்சியிருக்கிறது நம்மிடம், யார் தட்டிக் கேட்க முடியும் என்ற நினைப்புடன்! அவர்களுக்கு கவனமூட்ட விரும்புகிறோம், ஆளவந்தார் நினைக்கும் பொருட்குகையல்ல அது, புண்பட்ட உள்ளத்தின் வேதனைபுரி என்பதை!

வேதனைபுரி நோக்கி விரைவது என்றும் வெற்றியளிக்காது, கவனமிருக்கட்டும்!

சாப்பாடு இல்லாது தவிக்கும் தாய் தந்தை, ஒட்டிய வயிறுடன் நிற்கும் மனைவி, அப்பா என்று அலறும் குழந்தைகள் ஆகியோரின் அழுத கண்ணீரை, துன்ப அலைகளைத் தாங்க முடியாது, தவித்து, எங்கேயாவது ஓடுவோம் எதையாவது செய்வோம் இடிந்த நிலை சீர்பட்டால் போதும் என்று துடித்து தொல்லை நீங்காதா என்று இங்கிருந்து வெளியேறியவர்களின் துயரக்காட்சிதான் தேயிலைத்தோட்டத்திலே, பாடல்.

அத்தனை வேதனைகளையும் தாங்கிக் கொண்டு, இலங்கைத் தீவிலே குடியேறிய, இந்தியாவிலிருந்து சென்றோர் தொகை சுமார் 8 லட்சம் ஆகும்.

இவர்களுக்கு, அங்கு வாழும் பிரஜா உரிமையைத்தர, அண்மையில் இந்தியாவைப் போலவே, சுதந்திரமடைந்த இலங்கை சர்க்கார் 'அக்கினி பரிட்சை' வைத்துள்ளார்கள். அவைகளைக் காணும்பொழுது, இலங்கை சர்க்காரின், நடவடிக்கைகளா இவை என்ற வியப்பும் அதையொட்டிய வேதனையுமே உருவாகிறது, நமக்கு.

பிரஜா உரிமை, தனி மனிதனின் சுதந்திரம். தன்னிடம் வந்து, தனக்காகவே தன் உழைப்பைத் தந்துவிட்ட, ஒரு மனிதனுக்குரிய உரிமையை அளிக்க, இலங்கை சர்க்கார் விதித்திருக்கும் நிபந்தனைகள் நெருப்பைத் தாண்டுவது போன்று இருக்கிறது.

இலங்கையின் பிரஜா உரிமையைப் பெறவேண்டுமேயானால், பத்து ஆண்டுகள் அங்கேயே வாழ்ந்திருக்க வேண்டும், திருமணம் ஆகியவர்களாக இருந்தால் குடும்பத்துடன் ஏழு ஆண்டுகள் இருந்திருக்க வேண்டும்.

அப்படிப்பட்ட தகுதியுடையவர்கள் தங்களைத் தாங்களே காப்பாற்றிக்கொள்ளக் கூடுவதற்கான வழியும் வகைகளும் உள்ளவர்களாக இருக்கவேண்டும்.

அதுமட்டுமல்ல, மனைவி மக்களுடன் இலங்கையிலேயே இருந்துவருகிறோம், என்பதற்கான அத்தாட்சிகளைக் காட்டவேண்டும். அப்படியில்லாது யாராவது ஒருவருடைய சிறுகுழந்தை. வெளி நாட்டிலிருப்பதாகத் தெரியுமேயானால்கூட, பிரஜா உரிமை மறுக்கப்படலாம்.

இலங்கை இந்தியர் பிரஜா உரிமைச் சட்டத்தில் இருக்கும் இன்னொரு ஷரத்து, இலங்கையின் சட்டதிட்டங்களை ஏற்றவர் மட்டுமே இலங்கையின் குடிமகன் ஆகமுடியும் என்பது. இதன்படி பார்த்தால் இந்தியாவிலிருந்து சென்ற ஒருவர் யாராவது, அங்குள்ள தன்னுடைய சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொண்டிருந்தால், அவர் பிரஜா உரிமை பெறமுடியாது. இலங்கையின் சட்டப்படி சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொள்வது, புறம்பானதாகும்.

இதுமட்டுமின்றி, தான் இலங்கையிலேயே எப்போதும் நிரந்தரமாக வாசம் செய்யப்போவதாக உறுதிமொழி செய்துதரவும் வேண்டும்.

இருக்கும் 8-லட்சம் பேர்களில், இந்த நிபந்தனைகளைப் பூர்த்திசெய்யக் கூடிய நிலையில், ஒருசில நூறு பேராவது தேறுவார்களா என்பது சந்தேகந்தான். இதுவரை 300-அல்லது 400-பேர்தான், இந்தநிபந்தனைகளை நிறைவேற்றி பிரஜாஉரிமை பெற்றிருக்கிறார்களாம்.

இலங்கை சிறுதீவு, இதற்கு இத்துணை ஆணவமா, நாம்யார் தெரியுமா, முப்பது கோடிமக்களின் ஒப்பற்ற சமுதாயமல்லவா, என்றெல்லாம் இங்குள்ள சிலர் தோள்தட்டுவதுபோல, வீரம் பேச் விரும்பவில்லை நாம், அது விவேகமாகாது என்பதால்.

சிறுதீவு, சிறிய நாடு என்பதால் அதனுடைய சுதந்திர நிலையையோ, ஆட்சித்திட்டங்களையோ, எவரும் அலட்சியமாகப் பேசுவதோ, ஆகட்டும் பார்க்கிறேன் என்று பயமுறுத்துவதோ, விஷயம் அறியாததன் விளைவு என்றுதான் கருதப்படும்.

இலங்கை சர்க்கார், தனது நாட்டு நலனையொட்டி, நடவடிக்கைகள் எடுக்குமேயானால் அது எல்லோராலும் பாராட்டப்பட வேண்டியதுதான். ஆனால் அதே நேரத்தில், தனது நாட்டில் குடியேறி, தனது செல்வத்தைப் பன்மடங்காக்கி

(9-ம் பக்கம் பார்க்க)



## கடவுள் விஷயம்!

4-ம் பக்கத்தொடர்ச்சி

போய் சந்திரசேகரன் கடை சரக்கை வாங்கு — அவன் அநியாய விலை வைத்துத்தான் விற்பான், இருந்தாலும் அவனிடமே வாங்குன்னு சொல்வாரா--அதுதானு கடவுளுக்கு வேலை......"—என்று மடமடவெனப் பேசுகிறார். அந்தச்சமயத்திலே, அவர் யாராக இருக்கிறார்? பக்தராகவா? நாத்திகராவா?—சிந்தித்துப் பாருங்கள்—வேடிக்கை வளரும். சின்னம்மாள், கணவரின் சீற்றம் அடங்கிய பிறகு, பேச்சைத் துவக்கி, "தாகு தர்மலிங்கத்தோடு ஏன் தகராறு செய்துகிட்டீங்க? அவன் விஷமக்காரனாச்சே! நமக்கு ஏன் அவனோடே விரோதம்? நஷ்டமும் கஷ்டமும் நமக்குத்தானே?" என்று கூறுகிறார். கந்தப்பர் இதற்கிடையிலே ஏழெட்டு முறை, முருகா! முருகா! என்று அழைத்து விட்டார், ஆறேழு முறை அம்பிகையை அழைத்து விட்டார், கூடத்து மாடத்தில் உள்ள பிள்ளையாரைக் கும்பிட்டுக் கொண்டார். கந்தப்பரின் 'ஆத்திகம்' அப்பு அழுக்கின்றி நடந்து கொண்டே இருக்கிறது. எனினும் தாகு தர்மலிங்கத்தைக் குறித்துப் பேச நேரிட்ட உடனே அவர்மனம் புதுவிதமாகிவிடுகிறது. "தகராறு ஏன் வந்ததுன்னு கேட்கறே? தாகு, மற்ற கடைக்காரர் கொடுக்கிறதை விட நான், அவனுக்குத் தாராளமாகத்தான் தருவது வழக்கம்—பிள்ளைகுட்டிக்காரன் பிழைச்சிப் போகட்டும்னு, அப்படி இருந்தும், அவன் தைரியம், பேராசை, போன வெள்ளிக்கிழமை, 'நூறு ரூபாய்' கொடுன்னு கேட்டான். ஏம்பாஎன்று கேட்டேன். அவரு, கோயில் கட்டறாராம் அவர் தெருக்கோடியிலே— அதுக்கு, 'தர்மம்' கொடுக்கவேணுமாம், நானு. தர்மலிங்கம்! காலம் இருக்கிறதைக் கவனிக்காமே, இப்படி நூறுகொடு, ஐம்பதுகொடுன்னு கேட்டா, என்னப்பா செய்யறது. கோயிலுக்கும் குளத்துக்கும் கொட்டிக் கொடுக்கிறபடியாகவா இங்கே இலாபம் குவியுது — அப்படின்னு, சமாதானமாகத்தான் சொன்னேன். உடனே 'கடவுள் காரியமாக நான் கேட்கிறேன், என் வீட்டுக்கலியாணம், சீமந்தத்துக்கு அல்ல— கொடுத்தா, அதுக்கான பலன், உங்களுக்குத்தான், கொடுக்காவிட்டாலும் சரி, உங்க இஷ்டம்—கடவுள் காரியத்துக்கு, பத்துப்பேரும் உபகாரம் செய்வாங்க—நீங்க, முடியாதுன்னு சொல்கிறிங்க—சரி—நான் என்ன சொல்ல இருக்குது—ஏதோ என்னாலே, உங்களுக்கு எவ்வளவோ கிடைச்சிருக்கும்; கடவுள் காரியத்துக்கு அந்தக்காசு உபயோகப்படக் கூடாது போலிருக்கு—உங்க இஷ்டம் அப்படி இப்படின்னு, என்னமோ இவன்தான் கடவுளைக் கண்டுவிட்டவன் போலவும், நாமெல்லாம் கடவுள் பக்தியே இல்லாதவங்க போலவும், என்னமோ கடவுள் இவனைக் கூப்பிட்டுக் கோயிலைக் கட்டச் சொன்னது போலவும், அளந்தான் அரைமணி நேரம்—அதுதான் தகராறுக்குக் காரணம்"— என்று விளக்குகிறார். சின்னம்மா, "என்னங்க, போனா போகுதுன்னு, ஒரு பத்தோ இருபதோ தொலைத்துவிடுவதுதானே. அவனும் கடவுள் காரியமாகத்தானே கேட்டான்" என்று கூற, சீறிய கந்தப்பர், "கடவுள் காரியமா! கடவுள் நேரிலேயே வந்தார், அவன்கிட்டே? ரூபாய்க்குக் கால்தரத்து கேட்பாண்டி அவன். கடவுள் பேரைச் சொல்லிக்கிட்டு 'காசு' திரட்டக் கிளம்பிவிட்டான் அவன். எனக்கா தெரியாது இவன் நடத்தை. கோயில் இருக்கிற திக்குக் கூட இவனுக்குப் பிடிக்காது. காலையிலே தூங்கி எழுந்திருந்ததிலே இருந்து ராத்திரி படுக்கிறவரையிலே, பொய்பேசிப்பேசி பொழுதை ஓட்டுகிறான் — இவனுக்குக் கடவுள் பக்தி வந்துவிட்டுதோ! கடவுள் காரியம்னு சொன்னா, கண்ணை மூடிக் கொண்டு அள்ளிக் கொடுப்பாங்க என்கிற தைரியம்" என்று பேசுகிறார். சின்னம்மாவுக்கு, என்ன சொல்வதென்றே தெரியவில்லை. கடவுள் காரியத்துக்காக என்று முன்பு ஒருமுறை காட்டுப்பட்டி மிட்டாதாரர் வந்தபோது, கந்தப்பர், ஆயிரத்தொரு ரூபாய் கொடுத்திருக்கிறார். "நம்ம சக்திக்கு மீறின தொகை" என்று சின்னம்மா தடுத்துக்கூடக் கேட்கவில்லை, காட்டுப்பட்டியார் நேரே நம்ம வீடுதேடி வந்துவிட்டபிறகு, ஆயிரம் கொடுக்காவிட்டா நல்லதா என்று வாதாடினார். காட்டுப்பட்டியாரிடம் காணிக்கை கொடுப்பதுபோலப் பணத்தைக் கொடுத்துவிட்டு, "கடவுள் காரியத்துக்கு உபயோகப்படாத படிக்கு வேறே எதுக்குத் தானுங்க பணம் இருக்குது" என்று பேசினார். இந்தக் காட்சிகள் சின்னம்மாவின் மனக்கண்முன் தோன்றின. தாகு தர்மலிங்கத்தின் 'கடவுள் காரியம்' கந்தப்பருக்குக் கடும் கோபம் கிளப்பிவிட்டது கேட்டு, சின்னம்மாளுக்குச் சிந்தனை குழம்பலாயிற்று. நமக்கு மட்டும் என்ன! சிந்தித்துப் பாருங்கள்—கந்தப்பர், யார்? அவருடைய மனப்போக்கு எத்தகையது? அவரை எந்த 'வகையிலே' சேர்க்கலாம், என்று எண்ணிப்பாருங்கள். வேடிக்கை வளரும். சின்னம்மா, சயனித்துக் கொண்டார்—சிவன் கோயில் தர்மகர்த்தா சீருடையாப் பிள்ளை, எதிர் வீட்டுக்காரர்—அவரிடம் பேசிக்கொண்டிருக்கச் சென்றார் கந்தப்பர். அரைமணி நேரம், 'சத்விஷயம்' பேசிக் கொண்டிருந்தனர். வீட்டுக்குப் பிறகு திரும்பினார் — பாலைப்பருகினார் —சின்னம்மாளைப் பார்த்தார், "பால்காரன், ஏன் இப்படி அக்ரமக்காரனாகிவிட்டான்—கடவுளுக்குப் பொதுவாக நடக்கச்சொல்லு" என்று கூறிவிட்டு, முருகனை மூன்று முறை அழைத்தார், அம்பிகையையும் அழைத்தார், படுத்தார், உறங்க. அந்த 'அழைப்பு' விடுத்த சமயம் அவருடைய மனநிலை என்ன? எதற்கு அழைத்தார்? என்பனபற்றி எண்ணிப்பாருங்கள் — விந்தையாக இருக்கும்.

* * *

கடவுள் விட்ட வழிப்படி நடக்கட்டும் — என்று சர்வசாதாரணமாகப் பேசுவர், பெரும்பாலோர், அவர்களுக்குள்ள ஆழ்ந்த கடவுள் நம்பிக்கையை இந்த வாசகம் காட்டுவதாகக், கருதப் படுகிறது.

இட்டமுடன் என்தலையில்...
இன்னபடி என்றெழுதி விட்ட
சிவனும் செத்துவிட்டானோ?
முட்ட முட்டப் பஞ்சமே
யானாலும் பாரம் அவனுக்கு.

என்று கூறிடும் கவிதை வடிவிலே உள்ள கருத்தும் இதுபோன்றதே. ஆழ்ந்த ஆத்திகத்தின், அசைக்க முடியாத கடவுள் நம்பிக்கையின் அடையாளமாக இக்கருத்துக்களைக் கூறுகிறார்கள். இத்தகைய கருத்துள்ள 'பேச்சு' யாரால் எந்தவிதமான நிலைமைகளின்போது கூறப்படு

கிறது என்பதை ஆராய்ந்து பார்த்தால் தான், இந்த வாசகங்களின் முழுஉண்மை துலங்கும். ஆராயுமுனபு, கடவுள்விட்டவழிப்படிநடக்கட்டும் என்றபேச்சு எப்படி, சர்வசாதாரணமாக நாட்டிலே கேட்கப்படுகிறதோ, அதுபோலவே, கடவுள் காப்பாற்றுவாருன்னு, நம்பிக்கொண்டே இருந்தானப்பா அந்த ஏமாளி—கடைசிவரையிலே!

என்ற பேச்சும் நாட்டிலே கேட்கப்படுகிறது. ஆழ்ந்த கடவுள் நம்பிக்கையை முதல்வாசகம் காட்டுகிறது என்றால், அந்த நம்பிக்கையைக் கேலி செய்து கண்டிப்பதாக இருக்கிறது இரண்டாவது வாசகம். — இந்த இருவகைக்கருத்துகளை வெளியிட்ட இருவரில், ஒருவர் ஆத்திகர்; மற்றவர் நாத்திகர் என்றும் அறுதியிட்டுக் கூறிவிடமுடியாது — அவர்களின் நினைப்பு நடவடிக்கை ஆகியவற்றைக் கவனித்தால்.

* * *

நெருப்புப் போலக் காய்கிறது—மூடிய கண்களைத் திறக்க வில்லை—சொட்டுப்பால்கூட உள்ளே இறங்கவில்லை — பார்க்கிறவர்களெல்லாம், ஐயோபாவம்! என்று கூறிப் பரிதாபப்படுகிறார்கள், கண்ணீரைத் துடைத்தபடி தாயார் குழந்தையின் பக்கம் உட்கார்ந்திருக்கிறார்கள், பாண்டுரங்கனிடம், நண்பர்கள் வருகிறார்கள், குழந்தையின் நிலைமையைப்பற்றி விசாரிக்க.

* * *

"டாக்டர் தாமோதரத்திடம் காட்டினயோ?"

"ஆறுநாள் அவர்தான் மருந்து கொடுத்தார்..........."

"ஊசி போட்டாரோ"

"மூணு போட்டாரே!"

*

"கட்டுமாத்திரை கந்தப்பண்டிதரிடம் காட்டினு, ஒரேவேளையிலேகாச்சல் போயிடுமேப்பா! பாண்டு! அவரைக்கூப்பிட்டுக்காட்டிப்பாரேன்"

"அவர் நாலுவேளை மருந்து கொடுத்தாருங்களே—பிறகு அவரே தான் சொன்னர், இங்கிலீஷ்மருந்து கொடுத்துப்பாரு பாண்டுன்னு"

* * *

இப்படி நண்பர்கள்கேட்கிறார்கள். பாண்டுரங்கன், தான் எடுத்துக் கொண்ட முயற்சியை எல்லாம் கூறுகிறான்; கடைசியாகத்தான் அவன் சொல்கிறான், மனக்கஷ்டத்துடன், கடவுள்விட்ட வழிப்படி நடக்கட்டும்—என்று. பெரியடாக்டர் ஒருவர் பெங்களூருக்கு வந்திருக்கிறாராம் சீமையிலிருந்து — அவர், 'பிராணவாயு'வையே நோயாளிகளுக்குத்தருவாராம், எப்படிப்பட்ட வியாதியானாலும் குணமாகிவிடுமாம், ஆனால், பணம் அதிகம் கேட்கிறாராம், 500க்குக்குறைவாக வாங்குகிற வழக்கமே கிடையாதாம்—என்ற ஒருதகவலைத் தருகிறார் ஒருநண்பர். பாண்டுரங்கனுடைய சக்திக்குமீறிய காரியம், அந்த வைத்தியம் — அவனே கடனுளி—500 ரூபாய் கேட்கும் சீமை டாக்டரை நாடமுடியாத நிலை—எனவே ஒருநீண்ட பெருமூச்சுடன் அந்தத் தகவலைக் கேட்டுக்கொண்டான் — பிறகுதான், கடவுள்விட்ட வழிப்படி நடக்கட்டும் என்றான். குழந்தை இறந்துவிட்டது — பெங்களூர் பெரியடாக்டரைப்பற்றிய தகவலைத்தந்த நண்பர், வேறோர் நண்பரிடம் கூறுகிறார், "கடவுள் காப்பாற்றுவார் என்றே நம்பிக்கொண்டிருந்தான் அந்த ஏமாளி, கடைசிவரையிலே!" என்று—கேலியும் கண்டனமும் கலந்த குரலில். பாண்டுரங்கன் கடவுளின் மீது பாரத்தைப் போட்டது, அந்த நண்பருக்கு,ஆத்திகமாக, ஆழ்ந்தநம்பிக்கையின் விளைவாக, பாராட்டுதலுக் குரியதாகத் தோன்றவில்லை— ஏமாளித்தனத்தின் விளைவு என்றே அவர், அவன் பேச்சைக் கருதுகிறார்; கடவுளின் மீது பாரத்தைப்போடுவது என்பது ஆத்திகமானால், அதைக் கேலியாகப் பேசுவது நாத்திகம்தானே! ஆனால் அந்தக் கேலி பேசியவர், சோமவார விரதக்காரர், சொக்கநாதரிடம் பக்தி கொண்டவர், பழுத்தசைவர்!!

* * *

கடவுள்விட்ட வழிப்படி நடக்கட்டும் என்ற ஆத்திக உரையாற்றிய பாண்டுரங்கன், அந்தப்பேச்சை முதலிலே கூறிக்கொண்டிருந்தவனல்ல. குழந்தைக்கு ஜுரம், என்றஉடனே மருந்து தரச்சொன்னன் மனைவியிடம்— பிறகு குழந்தை வைத்தியம் குப்பிப்பாட்டியை அழைத்துவந்து காட்டினன்—பிறகு கட்டுமாத்திரை கந்தப்பண்டிதரை அழைத்துவந்தான்—பிறகு மிஷன் ஆஸ்பத்திரிக்குக் குழந்தையை எடுத்துச் சென்றான்—பிறகு டாக்டர் சோமு, L. M. P. யை அழைத்தான்,அடுத்தபடி டாக்டர் சுந்தரம் M. B. B. S., வந்தார், பிறகு டாக்டர் தாமோதரம் வந்துபார்த்தார் — இதற்கிடையே, மிளகு மந்திரிக்கும் மாரிசாமி, கோழி சுற்றிவிடும் கோலப்பிள்ளை, விபூதி தூவும் மாயாண்டி, இப்படிப் பல மந்திரவாதிகளின் துணையையும் நாடினன் —விளக்கு வைத்தான் கோயிலுக்கு —குல தேவதையை வேண்டிக் கொண்டான் — மஞ்சள் துணியால், குழந்தையின் கையிலே காப்புக் கட்டினன்—இவ்வளவெல்லாம் செய்தான் பிறகு, அலுத்துப்போய், பலன் காணமல் பதைத்துப்போய், இனி என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துப் போயிருக்கும் போதுதான், பாண்டுரங்கன், கடவுள் விட்ட வழிப்படி நடக்கட்டும், என்றான்! துவக்கத்திலே அல்ல— முயற்சி செய்து பார்க்காத முன்பு அல்ல—வீட்டு வைத்தியம், டாக்டர், மந்திரம், பூஜை, இவ்வளவுக்கும் பிறகு, வழக்கமான பல வழிகளையும் பார்த்தான பிறகு, சொன்னன், கடவுள்விட்ட வழிப்படி நடக்கட்டும், என்று! அப்படி அவன் சொன்னது ஆழ்ந்த கடவுள் நம்பிக்கையின் விளைவு என்று கூறப்படுமானல், குழந்தைக்குக் காய்ச்சல் ஏற்பட்டதும், அவன், பல்வேறுமுயற்சிகளை எடுத்துக்கொண்டானே, அப்போது அவன், யாராக இருந்தான்—ஆத்திகனகவா? நாத்திகனகவா? சிந்தித்துப் பாருங்கள் — சிக்கலாக மட்டுமல்ல, சுவை தருவதாகவும் இருக்கும்.

*

## ஏஜண்டுத் தோழர்களுக்கு

"திராவிட நாடு" அதிகம் காப்பிகள் தேவைப்படுவோர், பிரதி வாரமும் புதன்கிழமைக்குள் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

மானேஜர்.



# குடிவிலக்கா?—கொள்கைவிலக்கா?

கடந்த ஆண்டு அக்டோபர் திங்கள் இரண்டாம் நாளன்று நாடு மகிழ்ந்தது, நல்லது செய்தோம் என்று நாடு நகர் பட்டி தொட்டி எங்கும் பவனி வந்தனர் நமது மந்திரிமார்கள்.

நாமும் மகிழ்ந்தோம், நல்லது செய்கிறார்கள், நம்மை ஆளவந்தார்கள் என்ற குதூகலத்தால், மனப்பூரிப்பால்.

இன்று மகாத்மா பிறந்த தினம், மங்களகரமான காரியத்தைச் செய்து விட்டோம், அவருக்கு எது பிரீதியானதோ, அதை நிறைவேற்றி விட்டோம் என்று அகமும் முகமும் மலர்ந்த பேசினர் காங்கிரஸ் தலைவர்கள்.

உள்ளதுதானே, என்று உள முவந்து கூறினேம், உருப்படியான காரியம் என்று போற்றினேம், புகழ்ந்தோம. சாதிக்காததைச் சாதித்துவிட்டோம், பஞ்சமா பாதகங்களில் ஒன்றை ஒழித்துவிட்டோம், மதுவரக்கன் ஒழிந்தான், மக்கள் வாழ்வில் மகிழ்ச்சி மலரும் என்று எக்காளமிட்டனர் காங்கிரஸ் நண்பர்கள்.

பல கோடி நஷ்டம் ஏற்படும் மதுவிலக்கால். பரவாயில்லை, பகுத்தறிவை மாய்த்து, மனிதனை மிருகமாக்கும் குடிபோதையை யன்றோ ஒழிக்கிறோம், ஆகவே இதன் மூலம் ஏற்படும் நஷ்டத்தைச் சமாளிப்போம், பயந்து பாதை மாறிவிடமாட்டோமென்று மார் தட்டிப்பேசினர் நமது ஆளவந்தார்கள்.

ஒரே கல் ஆனல் இரண்டு மாங்காய் என்று வானெலியில் வர்ணித்தார் கனம் பக்தவத்சலம்.

நாட்டின் நலிவு நீங்கும், நல்லவனையும் பொல்லாதவனுக்கும் கேடு ஒழியும், மதுப்போதை மாயும், மனிதன் மனிதனவான், குடிக்கு விரயமாகும் பணத்தைக் குடும்பத்துக்குச் செலவிடுவான், குழந்தை குட்டிகள் கஞ்சியின்றி கஷ்டமனுபவித்த காலம் மாறும், மனைவியின் தாலிக்கயிறு மிஞ்சும், மாளிகை வாசிகளாயிருந்தாலும் மதுபோதையிலாழ்ந்து கடன்பட்டு ஓய்ந்துவிழும் குடும்பங்கள் மீளும், இத்திய வழியில் பறிபோன பணமெல்லாம் மீதப்படும், நாட்டின் நன்மைக்குப் பயன்படும் நல்ல காலம் ஏற்படும் என்ற ஆசை எழுந்தது நமக்கு.

அப்படித்தான் அவரும் சொன்னர், கர்ஜனை செய்தார். அது கானமாக இருந்தது நமக்கு—நாட்டு மக்களுக்கு. மதுவிலக்கால் மக்களிடம் பணம் மிஞ்சப் போகிறது. அந்தப் பணத்தைச் சேமித்து வையுங்கள், அதற்கான நல்லவழி சேமிப்புப் பத்திரங்கள் வாங்குவது தான் என்று சர்க்கார் பிரச்சாரம் செய்யவும் போகிறது. ஆகவே மதுவிலக்கால் மக்கள் கையில் பணம் மிஞ்சும், அதே நேரத்தில் பாதுகாப்புப் பத்திரங்களில் பணம் போட்டு சேமித்து வையுங்கள் என்று தூண்டினல் பண நெருக்கடியைத் தடுக்கவும் ஏழைகள் நன்மை பெறவுமான இரண்டு லட்சியங்கள் நிறைவேறும்" என்றார் பக்தவத்சலம், சர்க்கார் சார்பில், வானெலியில் அன்று பேசுகையில்!

மக்கள் கையில் இந் நடவடிக்கை மூலம் ஏதோ கொஞ்ச நஞ்சமாவது பணம் மிஞ்சினல், அதுவே போதும். அந்த நிலைமை ஏற்படுவதற்காக, சுலபமாக வருமானம் வரக்கூடிய இந்த வழியை சர்க்கார் தியாகம் செய்வது மிக மிகப் பொருத்தமானது என்று பேசினர்.

மதுவிலக்குத் திட்டம் மகத்தானது, அது வெற்றி பெற மனிதாபிமான முள்ளவர் அனைவரும் பாடுபடவாரீர் என்று மனதார நாமும் கூவினேம், மக்களுக்குத் தெரிவித்தோம், மகிழ்ச்சியுடன் அழைத்தோம்.

"மதுவிலக்குத் திட்டத்தை மேற்கொண்டு நடத்த முடிவு செய்தது அறிய மகிழ்கிறேன். மதுவிலக்கு நமது கொள்கை. ஆகவே இதை கைகழுவும் எண்ணமே எழும்ப முடியாது......மதுவிலக்கு வெற்றி பெற வாழ்த்துகிறேன்" என்று இந்தியத் துணைப் பிரதமர் சர்தார் பட்டேல் வாழ்த்து தந்தார், சஞ்சலமின்றி அமுல் நடத்துங்கள், நமது கொள்கையல்லவா அது, என்று பாராட்டு அனுப்பினர்.

அப்போது காங்கிரஸ் தலைவராகயிருந்த அரசியல் நிர்ணய சபைத் தலைவர் ராஜேந்திர பிரசாத் பாராட்டிப் போற்றினர். "இந் நடவடிக்கை மூலம் சர்க்காருக்கு சந்தேகமின்றி வருமான நஷ்டம் ஏற்படத்தான் செய்யும். ஆனல் மக்களுக்கு இந்நடவடிக்கை மூலம் ஏற்படப் போகும் மகத்தான நன்மையைக் கவனிக்கும்போது இதனல் ஏற்படும் நஷ்டம் பெரிதல்ல. ஆகவே மனிதாபிமானம் நிறைந்த மாபெரும் காரியத்தில் வெற்றி பெறுவீர்களாக!" என்று மனமுவந்து வரவேற்றர், பலபடப் புகழ்ந்தார், பாராட்டினர்.

இந்தியாவுக்கே நாம் வழிகாட்டுகிறோம் என்று இந்தியாவின் கவர்னர் ஜனரல் ஸி. ஆர். பெருமிதமடைந்தார், பூரித்தார்.

காந்தியடிகளின் கனவு நனவாகிவிட்டது, காங்கிரஸ் கூறியதைச் செய்யாமல் விட்டு விடுமா என்ன, எதுவரினும் என்ன, அச்சமில்லை அச்சமில்லை என்ற பாரதி வாக்கை வீணகவா ஆக்கிவிடுவோம், என்று வீரமுழக்கமிட்டனர், வெற்றிச் சிரிப்பு எழுந்தது, நமது காங்கிரஸ் நண்பர்களுக்கு.

மக்கள் மன்றத்திலும் அன்று மகிழ்ச்சி மலர்ந்துகிடந்தது. குடிசையிலேத் தவித்த காத்தாயி முதல், மாளிகை மாடியிலே தேம்பி நின்ற கோமளா வரை அன்று குதூகலித்தனர், இனிக் கவலையில்லை, கணவன் தொல்லையில்லை, கஞ்சிக்குக் காசு மிஞ்சும், அட்டிகையும் ஒட்டியாண

மும் அடகுக்குப் போகாது என்ற திருப்தியால், பூரிப்பால்.

மது ஒழிந்தது, மக்கள் வாழ்வில் இன்பம் மலரும், மகத்தான சாதனை இது, என்று நாமும் மகிழ்ந்தோம், பாராட்டினோம், வெற்றி பெற சர்க்காருடன் ஒத்துழைப்போம் என்று கூறினோம், கூவினோம்.

* * *

சரியாக ஓராண்டு முடிந்து அக்டோபர் சென்று நவம்பர் நடந்து கொண்டிருக்கிறது. வானொலிப் பேச்சும், தலைவர்கள் பாராட்டும், அன்று எழும்பிய சங்கொலியும் தப்பட்டை முழக்கமும், கோலாகல வைபவங்களும், இன்னும் மறைந்துவிடவில்லை, மங்கிவிடவில்லை. பக்தவத்சலத்தின் 'பாணி' காதில் இன்னும் எதிரொலித்துக் கொண்டேயிருக்கிறது. பவனி வந்து பேசிய மந்திரிமார்களின் பிரசங்கங்கள், எண்ணத்தை விட்டு, இன்னும் அகன்று விடவில்லை. மதுவிலக்கு அமுலுக்கு கொண்டு வரப்பட்டு ஓரே ஒரு ஆண்டுதான், பன்னிரண்டே மாதங்கள்தான் ஆகியிருக்கிறது. அதற்குள்,

மதுவிலக்கு கரையும் விழா!
கனவான்கள் கருணை காட்டுக!
அள்ளிப் பருகலாம்! ஆனந்தம் பெறலாம்!!
வாய்த்த சமயம் நழுவ விடாதீர்!

என்ற, வாக்கியங்களைச் சொல்லாமல் சொல்லி வந்து பாருங்கள் என்று அழைக்கின்றனர், மதுவிலக்கு கரையும் விழாக் கொண்டாட முனைகின்றனர், கடந்த ஆண்டு கொண்டு வந்த மதுவிலக்குச் சட்டத்திற்கு இந்த ஆண்டு திருத்தங்கள் கொண்டு வருகின்றனர், நீர் நிறைந்த குடத்தில் பொத்தல்களை உண்டாக்குவது போல, சட்டத்தின் சந்து பொந்துகளைத் திறந்து விடுகின்றனர் ஆளவந்தார்கள்.

"ரூ 500 பணம் கட்டினால் மாதம் நான்கு புட்டிகள் வாங்கிக் கொள்ளலாம்."

என்று விளம்பரப் பலகைத் தொங்கவிடுவதுபோல, புது உத்தரவு பிறப்பித்துள்ளனர். மாஜிகுடிகாரர்கள் இருந்து, அவர்களால் மதுவிலக்கை அனுசரிக்க முடியவில்லை, மது இல்லாவிட்டால் வாழ முடியாது, நோய் நொடிக்கு ஆளாக வேண்டியதுதான் என்ற நிலை ஏற்பட்டால், டாக்டர்கள் அளிக்கும் சர்ட்டிபிகேட்டின்மீது ரூ. 50 பணம் கட்டிவிட்டு மது வாங்கிக் கொள்ளலாம் குடித்து மகிழலாம் என்பதாக, மதுவிலக்குச்சட்டத்தில் கூறப்பட்டிருக்கிறது. இப்போது, டாக்டரிடம் அனுமதி பெறவேண்டும் என்பதற்குப்பதில் ரூ. 500 கட்டினால்போதும் என்பதாக மாற்றியுள்ளனர், கனவான்களுக்கு கடை திறந்து வைக்கப்படும் என்று கூறுவதுபோல, அனுமதி உண்டு ஆகவே வாருங்கள் என்று சொல்வதுபோல, சட்டத்தின் தாழ்ப்பாளைத் திறந்து விடுகின்றனர்!

ரூ. 500 கட்டிவிட்டால் போதுமாம், அனுமதி கொடுக்கப்படுமாம், டாக்டர் சர்டிபிகேட் கூடத் தேவையில்லாம்! 'மந்திரி! மாத மும்மாரி பெய்கிறதா' என்று ராஜா கேட்க, மழைபெய்கிறதா இல்லையா என்பது கூடத்தெரியாதவரா நமதுமகாராஜா என்று எண்ணுதவனும் மதி மந்திரி, "பெய்கிறது மகாராஜா" என்று கூறுவானே நாடகமேடையில் அது போன்ற இடத்தில் நடந்ததல்ல, நகைச்சுவைக்கானது, நன்றாகசிரிப்பு வருகிறது நல்ல 'காமிக்' என்றுகூறி விட்டுப்போய்விடுவதற்கு! நாடாள வந்த நாயகர்கள், நாடு என்றால் என்ன, எப்படியிருக்கிறார்கள் மக்கள், நேற்று என்ன சட்டம் போட்டோம், இன்று என்ன உத்திரவு பிறப்பிக்கிறோம் என்றுகூட அறியாதவர்கள்போல உத்திரவு பிறப்பிக்கின்றனர், 'உத்திரவாதம்தேவையில்லை! ஒரு ஐநூறு போடு! உண்டு உனக்கு அனுமதி' என்று பிரகடனப்படுத்துகின்றனர்.

ஓராண்டுதான் முடிந்திருக்கிறது, உத்தமர் மகானின் சத்தியபோதனைப்படி நடக்கிறோம் என்றுசண்டப்பிரசண்டர்களாகப் பவனிவந்து, கர்ஜனை முழங்கிய கனவான்கள், மேலிடத்தின் பாராட்டுதலுடன்,பட்டேல் வாழ்த்த, பிரசாதமகிழ, மதுவிலக்கு நடவடிக்கை அமுலுக்கு கொண்டு வந்து. அதற்குள், "கள்ளுக்கடைத் திறப்புவிழா" செய்யலாமா என்று கனஜோராகச் சிந்திக்கத்துவங்கிவிட்டதுபோல், காரியங்களில் ஈடுபடுகிறார்கள் உத்திரவிடுகிறார்கள்.

"புது பிசினஸ், ஒரு ஐநூறு தாங்கோ ஒரேமாதம்........."

"என்னப்பா, அப்படி"

"ஆமாங்க, ஒரேமாதத்தில்தந்துடரேனுங்க"

"பணம் தருவது சரி. பிசினஸ் என்னவாம்!"

"நாலு பாட்டிலுங்க!"

"சரிதான், புத்தி தடுமாறுதோ, போடா போக்கத்தவனே!"

"ஏன், அகப்பட்டுகுவேன்னு பயமுங்களா! அதெல்லாம் முடியாதுங்க"

"மதுவிலக்கு அமுல் நடக்குது தெரியுமில்லே!"

"தெரியுமுங்க, அதனாலேதான் கேட்டேன். ரூ. 500. கொடுத்து, மாதத்துக்கு நான்கு பாட்டில் வாங்கிக்கலாமுங்க. டாக்டர் சர்டிபிகேட் கூட வாணாமுங்க. சர்க்கார் உத்திரவு போட்டிருக்குதுங்க."

இதுபோன்ற பேச்சுகள் இனி நாட்டில் எழும்பாமலா இருக்கும்! பிராந்தி கொண்டுவருவது, கள்ளச் சாராயம் காய்ச்சுவது கள்ளமார்க்கெட்டில் விற்பது, கொள்ளைலாபம் சம்பாதிப்பது என்று எண்ணற்ற 'கனவான்'கள் முனைந்திருப்பதாக, அன்றன்றுடம் வரும் செய்திகள் கூறுகின்றனவே! ஆட்சியாளர்கூட, மதுவிலக்கு இருந்தாலும், மக்களிலே சிலர் மறைந்து நின்று குடிக்கவும், கள்ளத்தனமாக வாங்கவும் ஈடுபட்டிருக்கின்றனர் இதையெல்லாம் தடுக்கவேண்டும் என்று தினசரி முழக்கமிட்டு வருகிறார்களே நமது மந்திரிமார்கள்! இந்த நிலையில் "500 போடு! குடித்துக்கொள்" என்று அனுமதியளிப்பது கேடுவிளைவிக்குமே, கெடுமதி எண்ணம் என்று தூற்றப்படுமே, மதுவிலக்கு கூடாது என்போரின் கிண்டல் அதிகரிக்குமே, என்பதெல்லாம் தெரியாதவர்

(2-ம் பக்கம் பார்க்க)

Edited Printed & Published by C. N. Annadurai M. A. at "Dravidanadu" Press, 95, Tirukkachinambi Street, Kancheepuram.

